4 பக்கங்கள் 20 காசுகள்

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 16-6-74 ஞாயிறு மலர் 139

## கல்கத்தா நகரில் 2 லட்சம் பேர் தெருவில் வாழ்கின்றனர்

கல்கத்தா, ஜூன். 16—

கல்கத்தா நகரில் 2 லட்சத்துக்கும் அதிகமானோர் தெருக்களில் வாழ்கின்றனர்.

இத் தகவலை கல்கத்தா மெட்ரோபாலிட்டன் அபிவிருத்திக் குழு அறிவித்துள்ளது. மேலும் கல்கத்தாவில் 25 லட்சம் மக்கள் சேரிகளில் வாழ்கின்றனர்,

ப

## துறைமுக … ர் கோரிக்கை தினம்

பம்பாய் ஜூன் 16—

இந்தியா முழுவதும் உள்ள துறைமுக தொழிலாளர்கள் 2 லட்சம் பேர் ஜூன் 26 அன்று கோரிக்கை தினம் அனுஷ்டிக்கின்றனர்.

சம்பள உயர்வு உள்ளிட்ட கோரிக்கைகளை முன் வைத்து இந்த கோரிக்கை தினம் அனுஷ்டிக்கப்படுகிறது.

# ★ 9 ஆயிரம் இரயில்வே தொழிலாளர் வேலைநீக்கம்
# ★ $2\frac{1}{2}$ இலட்சம் பேருக்கு சர்வீஸ் வெட்டு
# பழிவாங்குவதை நிறுத்துக!

## நிவாரண உதவிகள் அளிக்குமாறு பி.டி. ரணதிவே, பி. ராமமூர்த்தி அறிக்கை

கல்கத்தா, ஜூன் 15--

**இந்திய அரசும், அதன் இரயில்வே போர்டும், தாமே உருவாக்கிய அத்தனை சட்டங்களையும் சட்ட விதிகளையும் குப்பைத் தொட்டியில் வீசியெறிந்து விட்டு பல்லாயிரக்கணக்கான இரயில்வே தொழிலாளர்களை வேலையை விட்டு நீக்கியும், லட்சக்கணக்கான தொழிலாளர்களின் சர்வீஸை வெட்டியும் வஞ்சம் தீர்த்து வருகிறார்கள்.**

அரசாங்கத்தின் வெறி பிடித்த இந்த சட்ட விரோதப் பழிவாங்கலை எதிர்த்து, சி ஐ டி யூ சங்கங்களெல்லாம் கண்டன இயக்கம் நடத்த வேண்டுமென்றும், பாதிக்கப்பட்ட இரயில்வே தொழிலாளர்களுக்கு நிதி வசூலித்து உதவுதல், வக்கீல் வைத்து வாதாடல், போன்ற பல வழிகளிலும் உதவுவதில் தீவிரமாய் ஈடுபட வேண்டுமென்றும் சிஐடியூ தலைவர் பி டி ரணதிவேயும், பொதுச் செயலாளர் பி. ராமமூர்த்தியும் அவசர வேண்டுகோள் விடுத்துள்ளார்கள்.

இதுபோன்றே மார்க்சிஸ்ட் கட்சியின் அரசியல் தலைமைக் குழு (பொலிட் பீரோ) அறை கூவல் விடுத்துள்ளது.

விலைவாசிகள் விஷம்போல் உயர்ந்து விட்ட இக்காலத்தில், வாழ்க்கைச் செலவுகள் அதிகமாகி விட்டதால், அரசாங்கத்துக்குச் சொந்தமான பொதுத்துறை தொழில்களில் கொடுக்கப்படுவது போன்று சம்பளம் தருக! சோற்றுக்காக வாங்கிய கடனை அடைத்திட போனஸ் தருக!—என்று, எத்தனையோ வழிகளில் கேட்டுப் பார்த்தும், எத்தனையோ ஆண்டுகள் காத்திருந்தும் கூட, அவர்களது கோரிக்கைகளெல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்கு போல் ஆகிவிட்டபிற்பாடு தான் இந்தியா முழுவதுமுள்ள இரயில்வே தொழிலாளர்கள் ஒன்றுபட்டு வேலை நிறுத்தத்தில் இறங்கினார்கள்.

### வம்புக்கு இழுத்தனர்

வேலைநிறுத்தத்தில் இறங்குவதற்கு முன்னடியே — எப்படியாவது பேச்சு வார்த்தை மூலம் சமரசத் தீர்வு காண விரும்பினார்கள்.

பேச்சு வார்த்தை நடந்து கொண்டிருக்கும்போதே, தொழிற்சங்கத் தலைவர்களை கைது செய்தும், இரயில்வே வண்டிகளை ரத்துசெய்தும், வலிய வம்புக்கிழுத்து வேலைநிறுத்தம் ஏற்படச் செய்து விட்டு —தொழிலாளர்கள் மீது பழிபோட்டது இந்திய சர்க்கார்.

தொழிலாளர்களை நசுக்க, படைபட்டாளங்களை ஏவி அரசாங்கம் போர் தொடுத்தது.

வேலை நிறுத்தம் திரும்பப் பெறப்பட்டு தொழிலாளர்களெல்லாம் வேலைக்குத் திரும்பினார்கள்.

### இனிப்பு வார்த்தைகள்

வேலைநிறுத்தக்காரர்கள்பால் அரசாங்கம் கடுமையாக நடந்து கொள்ளாது என்று பிரதமர் இந்திரா காந்திகூறினார்.

ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களாகவே அனைவரையும் கருதுவோம் என்று இரயில்வே மந்திரி எல். என். மிஸ்ரா கூறினார்.

வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டவர்களுக்கு எதிராக பழிவாங்கும் போக்கில் அரசாங்கம் நடந்து கொள்ளாது என்று உள்துறை அமைச்சர் உமாசங்கர் தீட்சித் கூறினார்.

ஆனல், அவர்கள் கூறிய வார்த்தைகள் அனைத்தும் ஊரை ஏமாற்றும் பாசாங்கு மொழிகளே தவிர, உள்ளத்திலிருந்து வெளியான உண்மைஒலி அல்ல.

### 9000 பேர் டிஸ்மிஸ் இரண்டரை லட்சம் சர்வீஸ் வெட்டு

இரயில்வேயில் இன்றைய நிலவரம் என்ன?

பல்வேறு நாசவேலைக் குற்றங்களைச் சாட்டியும், விசுவாசிகளை தாக்கியதாகவும் சாக்கு சொல்லி 9000 தொழிற்சங்க ஊழியர்களை டிஸ்மிஸ் செய்திருக்கிறார்கள்.

அதுமட்டுமல்ல.

கிட்டத்தட்ட இரண்டரை லட்சம் தொழிலாளர்களின் சர்வீசை வெட்டியிருக்கிறார்கள்.

கொடுமை மேலும் தொடருகிறது.

லட்சக்கணக்கான டெம்பரரி தொழி

(4-ம் பக்கம் பார்க்க)

## அச்சுதர் ஆட்சியில் கேரள கஜானா காலி

### நன்கொடை வசூலித்து ஆட்சி நடத்தப்போகிறார்களாம்!

திருவனந்தபுரம், ஜூன். 14—

கேரள கஜானா காலியாகி விட்டது. அன்றாட அரசுச் செலவுக்கே வழியில்லாத நிலை ஏற்பட்டிருக்கிறது. இந்நிலையில் முதலமைச்சர் அச்சுத மேனன் வெளிநாடுசென்று விட்டார்.

அரசை நடத்துவது எப்படி என்று தெரியாத நிதிஅமைச்சர் இப்பொழுது ஒரு திட்டத்தை தயாரித்துள்ளாராம்.

இன்னிசை நிகழ்ச்சி, நட்சத்திர இரவுகள், மாஜிக் வித்தைகள்போன்றவற்றை நடத்தி அதிலிருந்துகிடைக்கும் வருமானத்தைக் கொண்டு ஆட்சிநடத்துவதென்பது இவர் திட்டமாம். இதற்காக இவர்உயர் அதிகாரிகளிடமும ஆலோசனை நடத்தி முடித்து விட்டாராம்;

இந்த திட்டம் அமுல் படுத்தப்பட்டால் அரசு அலுவலகங்களில் ஏதேனும் பிரச்சனைக்குச் செல்லும் ஏழை மக்களின் பாடு திண்டாட்டம்தான்!

ஊதாரிச் செலவுகள் நடத்தி அரசு கஜானாவை பாழடித்தவர்களின் இந்த இறுதி முயற்சி எங்கே வெற்றி பெறப் போகிறது. பெரும் ஆரவாரத்துடன் வந்த லட்சம் வீடு திட்டம் என்னவாயிற்று?

## இனக் கலவரம் இராணுவத்தை உஷார்படுத்துகிறது பாகிஸ்தான் அரசு

இஸ்லாமாபாத் ஜூன் 14

பாகிஸ்தானில், இருபகுதி முஸ்லீம் பிரிவினரிடையே ஏற்பட்டுள்ள இனக் கலவரத்தை அடக்கி ஒடுக்குவதற்கு பாகிஸ்தான் அரசாங்கம் இராணுவத்தை உஷார்ப்படுத்தியுள்ளது.

பாகிஸ்தான் பிரதமர் புட்டோ 12ந் தேதி ரேடியோவில் பேசும்போது இத்தகவலை வெளியிட்டார்.

தங்களது கோரிக்கைகளை 3 நாட்களுக்குள் ஏற்றுக் கொள்ளாவிடில் ஹர்த்தால்கள் துவங்கப்போவதாக மௌல்விகள விடுத்துள்ள இறுதி எச்சரிக்கைக்கு தாம் பணியப்போவதில்லை என்று கூறினார் புட்டோ.

இவ்வாறு கூறிய புட்டோ அதே சமயத்தில், இது குறித்து தாம் எவ்வித முடிவும் தற்போது செய்ய முடியாது என்றும்—முடிவு செய்ய இது இது தருணம் அல்ல வென்றும். தற்போதைய பட்ஜெட் கூட்டத்துக்குப்பிறகு இனப் பிரசசனை, தேசிய அசெம்பிளிக்கு விரைவில் எடுத்துச் செல்லப்பட்டு முடிவு செய்யப்படும் என்றும் அவர் கூறினார்.

## தமிழகதொழிற்சங்க இயக்கத்தில் கூட்டுபேர உரிமைக்குபேரபாயம்

### எதிர்த்துப் போராடும்

# சேஷசாயி பேப்பர் மில் தொழிலாளர்களுக்கு ஜூன் 19 ஆதரவு தினம்

## சி.ஐ.டி.யூ. அவசர அறைகூவல்

திருச்சி, ஜூன். 15—

**சென்ற 55 நாட்களாக சேஷசாயி பேப்பர் மில் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர். இந்த வேலை நிறுத்தம், கூட்டுபேர உரிமைக்கு ஏற்பட்டிருக்கும் பேரபாயத்தை எதிர்த்து நடத்தப்படுகிறது என்றும், இந்த போராட்டத்தை ஆதரித்து, ஜூன்19-ந் தேதி அன்று தமிழகமெங்கும் ஆதரவு தினம் அனுஷ்டிக்கப்பட வேண்டுமென்றும் சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு அவசர அறை கூவல் விடுத்திருக்கிறது,**

சி ஐ டி யூ தமிழ் மாநிலக் குழு சார்பில் அதன் பொதுச் செயலாளர் தோழர் ஆர். உமாநாத் விடுத்துள்ள அறிக்கைவருமாறு—

22—4—1974-ம் தேதி முதல் இன்றுடன் 55 நாட்களாகபள்ளிபாளையம்சேஷசாயி பேப்பர் மில் தொழிலாளிகள்— 3,000.க்கும மேற்பட்டவர்கள்— வீரமான ஒன்றுபட்ட வேலை நிறுத்தப்போராட்டம்நடத்தி வருகிறார்கள்.

போராட்டத்தில் முன்வந்துள்ள பிரசனையான தமிழகத்தில் உள்ள அனைத்துத் தொழிற்சங்க இயக்கமும், சம்பந்தப் பட்டுள்ள தாகையால், மாநில ரீதியில் தொழிலாளிகள் உடனடியாகத தலையிட வேண்டிய கட்டத்தை அடைந்துள்ளது.

### ஒரே சங்கம சி. ஐ. டி. யூ

மேற்படி மில்லில் இயங்கி வரும் எல்லாத் தொழிற்சங்கங்களும் கூட்டாக ஒப்பந்தம்செய்து, பெட்டிவைத்து, எல்லாத் தொழிலாளிகளும் ஓட்டுப் போட்டு சி ஐ டி யூ சங்கம்தான் எல்லோரை பிரதிநித்துவப் படுத்தும்ஒரே சங்கமென முடிவாயிற்று.

ஓட்டெடுப்பில் கலந்து கொண்ட ஐ.என்.டி.யூ.சி, ஏ.ஐ டி.யூ.சி, எச்.எம்.எஸ். தி. மு. க. சங்கங்கள் அனைத்தையும் சேர்த்து வைத்துப் பார்த்தாலும்மிகச சிறுபான்மை எனத்தெரிந்த படியால் அவை அனைத்தும் கலைக்கப்பட வேண்டிய சங்கங்கள் என்றும் முடிவாகி விட்டது.

இதற்குப் பின், தொழிலாளிகள் முன்வைத்த பஞ்சப்படி உள்ளிட்ட பிரதான கோரிக்கைகளில்,சேசசாயி நிர்வாகம் ஒருதலைப்பட்சமாக முடிவுசெய்த சரத்துக்களை தொழிலாளிகள் தலையில் திணிக்கும் பொருட்டு, கலைக்கப்பட வேண்டியவை என்று தொழிலாளிகள் முடிவெடுத்த 5 சிறுபான்மைச் சங்கத் தலைவர்களிடம் கையெழுத்துப் பெற்று, ஒப்பந்த வடிவம் அளிக்கப்படுகிறது.

இந்த சட்டவிரோதமான ஒப்பந்தத்தை சட்டத்தின் பேரால் எல்லாத் தொழிலாளிகளையும் கட்டுப்படுத்தச் செய்வதன் மூலம் முதலாளிக்கு தாசனைகப் பணியாற்ற— பிரதிபலன் பெற்றோ, பெருமலோ அல்லது எதிர்பார்த்தோ எனத் தெரியவில்லை— கோவை டெப்புடி லேபர் கமிஷனர் அதில் கையொப்பமிட்டு. அதற்கு “12 (3) ஒப்பந்தம்” என்று பெயரும் சூட்டினர்.

### வேலை நிறுத்தம்

அதற்குப் பின் தங்களின் ஏற்கனவே சமர்ப்பித்த கோரிக்கைகளை வற்புறுத்தி சேஷசாயி டேப்பர் மில்லில் 22—4—74 முதல் ஆரம்பித்த வேலைநிறுத்தத்தில் ஒரு தொழிலாளிகூட ஒதுங்காமல் நூற்றுக்கு நூறு தொழிலாளிகளும சிப்பந்திகளும் பங்கெடுத்ததிலிருந்து அது எந்த ஒரு தொழிலாளியும் கூட ஏற்றுக் கொள்ளாத ஒப்பந்தம் என்பதும். சேஷசாயிமில்முதலாளிக்கு ஏவல் புரிய முதலாளியின் விருப்பத்தில்தான் ஏ ஐ டி யூ சி, ஐ என் டி யூ சி, எச் எம்.எஸ், தி.மு.க. தலைமைகளும், டெபுடி லேபர் கமிஷனரும் கையெழுத்திட்டார்கள் என்பதும் நாடறிய அம்பலமாயிற்று.

இப்படிப்பட்ட ஒரு செல்லாத ஒப்பந்தத்தை திணிக்கத்தான், சேஷசாயி நிர்வாகம் தொழிலாளர்களைநீடித்த பட்டினிக்கு ஆளாக்கி வருகிறார்கள். பயன்தரத்தக்க முறையில் தலையிடாமலும். சட்டவிரோதமான வேலை நிறுத்தம் என மிரட்டி, தொழிற்சங்கத்திற்கு லேபர் கமிஷனர் எழுதுவதன் மூலமாகவும், தமிழக அரசு முதலாளியின் இந்தத்தீய முயற்சிக்கு துணைநிற்கிறது.

இம் முயற்சி வெற்றிபெற்ருல் தமிழகத்தில் தொழிற்சங்க இயக்கத்தின் ஒரு பேராபத்தை உருவாக்குமென கூட்டுபேர உரிமைக்கே சி ஐ டி யூ சுட்டிக்காட்ட விரும்புகிறது.காகித சங்கங்களின் முத்திரைகளைப் பெற்று, லேபர் அதிகாரிகளின் ரப்பர்ஸ்டாம்பையும்பதிய வைத்து,முதலாளிகளின் எதேச்சாதிகார முடிவுகளை தொழிற் சங்க இயக்கத்தின் மீது எங்கும் பகிரங்கமாகத் தடையின்றி திணிக்க இது வழிவகுக்கும்.

ஆகவே இதை எதிர்த்து, சேஷசாயி பேப்பர் மில் தொழிலாளர்கள் நடத்தும் இந்தப் போராட்டம் அவர்களின் நலன்களைப பாதுகாப்பதற்காக மட்டுமில்லாது தமிழக தொழிற் சங்க இயக்கத்திற்கு நேரவிருக்கும் ஒரு அபாயத்திலிருந்து மீட்க நடத்தும் போராட்டமாகவும் அமைந்துள்ளது.

சுமார் 45 நாட்கள் போராட்டத்தை நீடிக்கச் செய்த பின்பும்,தொழிலாளிகளைப் பணிய வைக்க முடியாமல் தோல்விகண்ட நிர்வாகம். இனிமேல் நீடிப்பது தங்களுக்கேதாங்காதுஎனக் கண்டு போலீஸ் உதவி

(4-ம் பக்கம் பார்க்க)

## வனஸ்பதி விலையை உயர்த்துகிறது மத்திய அரசு

புதுடெல்லி ஜூன் 14

வனஸ்பதியின் விலையை உயர்த்துவது என்று மத்திய அரசு முடிவு செய்துள்ளது.

வனஸ்பதி உற்பத்தியை அதிகரிக்கச்செய்யவும். அதற்கான ஊக்கமளிக்கவுமே விலை உயர்த்தப்படுகிறதாம்.

ஒருகிலோவுக்கு இரண்டு ரூபாய்க்கு மேல் விலை உயர்த்தப்படும் என்று அறியப்படுகிறது.

## அர்ஜெண்டின அமைச்சரவை ராஜினமா

போனஸ் அயர்ஸ் ஜூன் 14—

அர்ஜெண்டின நாட்டு அமைச்சரவை ராஜினமாச் செய்தது.

தன்னிஷ்டம்போல்நடந்து கொள்ள இயலாததால் தான் ராஜினமாச் செய்யப் போவதாக இந்நாட்டு ஜனதிபதி ஜுவான் பெரோன் மிரட்டல் விடுத்ததைத் தொடர்ந்தே அமைச்சரவை 12ந் தேதி, இரவில் தனது ராஜினமாவை ஜனதிபதியிடம் சமர்ப்பித்ததாம்.

ஜனதிபதி சுதந்திரமாக தேவையான நடவடிக்கைகள் எடுப்பதற்கு ஆதரவாகவே அமைச்சரவை ராஜினமாச் செய்துள்ளதாம்.

## சிறு பத்திரிகைகளுக்கு பெரும் ஆபத்து

பாட்னு, ஜூன். 15—

பத்திரிகைக் காகித ஒதுக்கீட்டில் மேலும் வெட்டு ஏற்படுத்தப்பட்டிருப்பதால் ஏராளமான சிறு பத்திரிகைகளின் ஆயுள் முடிந்துவிடும் என்று சிறு பத்திரிகையாளர் சங்கத்தைச் சேர்ந்த காலித் ரஷீத்சாப் கூறியுள்ளார்.

## முன்னள் காங்கிரஸ் எம். எல்.ஏ. க்கு தூக்கு தண்டனை

ஸ்ரீநகர் ஜூன் 14—

காஷ்மீரைச்சேர்ந்த இந்திரா காங்கிரஸ் முன்னள் எம் எல் ஏ பியாராசிங் என்பவருக்கும் அவரது தம்பி கசாரா சிங்குக்கும் மரண தண்டனை விதிக்கப்பட்டுள்ளது.

1972 தேர்தலின்போது ஹர்பன்ஸ் என்ற பள்ளிக்கூட ஆசிரியரை கொலை செய்ததாக இவர்கள் மீது வழக்குத் தொடுக்கப் பட்டிருந்தது.

## வேலை தேடும் பட்டாளம் 81 லட்சத்து 60 ஆயிரம் பேர்

வேலை தேடித் தரும் நிறுவனத்தின், பதிவுப் புத்தகத்தில் 1974-ஆம் ஆண்டு ஏப்ரலில் பதிவு செய்த வேலையில்லாதோர் எண்ணிக்கை 81 லட்சத்து 60 ஆயிரம் பேர் என்று தெரிகிறது. சென்ற ஆண்டு இதே ஏப்ரல் மாதத்தில் பதிவான வேலையில்லாதோர் எண்ணிக்கை 72 லட்சத்து 70 ஆயிரம் பேர் மட்டுமே.

இந்த ஓர் ஆண்டுக்குள் 12லட்சத்து 20 ஆயிரம் பேர் வேலையில்லாதோர் பட்டாளத்தில அதிகப்படியாகச் சேர்ந்துள்ளார்கள் என்பது தெளிவு.

இந்த வேலையில்லாதோர் பட்டாளத்திலிருந்து 1974 ஏப்ரல் வரை வேலைக்கு அமர்த்தப்பட்டோர் 36 ஆயிரத்து 482 பேர் மட்டுமே அதோடு இந்த மாதத்தில் 38 ஆயிரத்து 491 வேலை காலி உள்ளதென்று அறிவிக்கப்பட்டது.

1974 ஏப்ரலில்புதிதாகப்பதிவு செய்துகொண்டவர்கள் 3,66,871 பேர். இந்த எண்ணிக்கை சென்ற ஆண்டு இதே மாதத்தில் பதிவானதை விட சுமார் 19 சதவீதம் குறைவு ஆகும்.

இது பதிவான வேலையில்லாத் திண்டாட்டத்தின் அளவு!

பதிவு ஆகாதது எத்தனை கோடியோ?

தீக்கதிர்

# அரசு—தனியார் பஸ்களில் அரை டிக்கெட் சலுகை கோரி போராட்டம்

## எல்லா மாணவர்களுக்கும் பெற்றேர்களுக்கும் இந்திய மாணவர் சங்கம் அறைகூவல்

சென்னை, ஜூன். 13—

அரசு, மற்றும் தனியார் பஸ்களில் சிறுவர்களுக்கு மீண்டும் அரைக்கட்டணச் சலுகை தரக்கோரி ஒன்று பட்ட போராட்டம் நடத்த முன்வரும்படி மாணவர்கள், பெற்றேர்கள் மற்றுமுள்ள ஜனநாயக அமைப்புகளுக்கும் இந்திய மாணவர்சங்கம் (எஸ்.எப்.ஐ) வேண்டுகோள் விடுத்துள்ளது.

இந்திய மாணவர் சங்கத்தின் துணைத் தலைவர் என். ராம், தமிழ்மாநிலக்குழு தலைவர் வி. கே. ராமச்சந்திரன் ஆகிய இரு தோழர்களும் விடுத்துள்ள அறிக்கை வருமாறு:—

### சலுகை ரத்து

பஸ்களில் குழந்தைகளுக்குத் தரப்பட்டு வந்த அரை டிக்கட் சலுகையை தமிழக அரசு அச்சின்னஞ் சிறு கரங்களில் இருந்து தட்டிப் பறித்து விட்டது.

இந்த அநியாயத்தை எதிர்த்துப் போராட அணிதிரளுமாறு எல்லா ஜனநாயக அமைப்புகளுக்கும் (எஸ். எப். ஐ) அறைகூவல் விடுக்கிறது.

### ஏழை-எளிய-மத்தியதரக் குடும்பம் பாதிப்பு

12 வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்கு அரசு பஸ்களிலும் தனியார் பஸ்களிலும் தரப்பட்ட அரை டிக்கட் சலுகை ரத்து செய்யப்பட்டதோடு மட்டுமல்லாமல், பஸ்கட்டணமும்உயர்த்தப்பட்டதை எதிர்த்து மாணர்களையும் பொது மக்களையும் போராட முன்வருமாறு இந்திய மாணவர் சங்கம் அழைக்கிறது.

தி. மு. க. அரசின் இந்த நடவடிக்கை தமிழகத்தில் பல்வேறு பகுதிகளில் பஸ்களில் பள்ளிக்குச் செல்லும் லட்சக்கணக்கான ஏழை எளிய மத்தியதர வீட்டுப் பிள்ளைகளையும் பெற்றேர்களையும் வெகுவாகப் பாதிக்கிறது. அத்தியாவசியமான பண்டங்களின் விலைகள் பூதாகரமாக உயர்ந்து விற்கும் இவ்வேளையில்—இப்படிப்பட்ட சலுகைகள் ரத்து செய்யப்படுவதும் கட்டணங்கள் உயர்த்தப்படுவதும் தாங்க முடியாத அடிகளாகும். நோட்டு, புத்தகம், சீருடை போன்ற பள்ளிச் செலவுகள் வேறு தலைபொறுக்க முடியாத சுமைகளாகிற இந்த வேளையில்—இந்த ரத்து உழைக்கும் மக்களைக் கடுமையாகத் தாக்குகிறது.

### கோரிக்கைகள்

12 வயதுக்குட்பட்ட சிறுவர்களுக்கு அரை டிக்கெட் சலுகையை அரசு பஸ்களிலும், தனியார் பஸ்களிலும் உடனே அளித்தல்

படிக்கிற 12 வயதுக்கு மேற்பட்ட பள்ளி, கல்லூரி இன்ஸ்டிட்யூட், பாலிடெக்னிக் மாணவர்கள் அனைவருக்கும் அரசு பஸ்களிலும், தனியார்பஸகளிலும் அரை டிக்கெட் சலுகைவழங்குதல் ஆகிய கோரிக்கைகளை முன் வைத்து தமிழ்நாடு பூராவும் போராட்ட அணி திரட்ட இந்திய மாணவர் சங்கம் தனது அமைப்புகளுக்கு வேண்டுகோள் விடுக்கிறது

கேரளாவில் செய்வது போல எல்லாக் குழந்தைகளுக்கும், அத்துடன் மாணவர்களுக்கும் அடையாள கார்டு வழங்குவதன் மூலம் அவர்கள் இந்த சலுகையைச் சரியாகப் பயன் படுத்திக் கொள்ள முடியும்.

### மாணவர் சங்க கிளைகளுக்கு

சி. ஐ. டி. யூ, விவசாய சங்கம், ஜனநாயக மாதர் சங்கம் போன்ற வெகுஜன ஜனநாயக அமைப்புகளின் ஆதரவு பெற்று இப்பிரச்னை குறித்து போராட வருமாறு மாணவர் சங்கம் தனது எல்லா கிளைகளையும் வேண்டுகிறது.

மாணவர்களையும், பெற்றேர்களையும்சந்தித்துக் கூட்டம் நடத்தவும், போஸ்டர் ஒட்டவும், துண்டு பிரசுரங்கள் வெளியிடவும், ஆர்ப்பாட்டம் நடத்தவும், மற்ற எதிர்ப்பு முறைகளைக் கையாளவும் மாணவர் சங்கம் தனது எல்லா கிளைகளுக்கும் அறைகூவல் விடுக்கிறது.

தமிழ்நாட்டின் ஒவ்வொரு பகுதியிலும் உள்ள லட்சக்கணக்கான குழந்தைகளையும், மாணவர்களையும், பெற்றேர்களையும் பாதிக்கும் இந்தப் பிரச்னையில் மாணவர்களையும், பெற்றேர்களையும்—குறிப்பாக பெண்களையும் ஒருங்கிணைத்துபோராடுவதன் மூலமாகத்தான் வெற்றி காண முடியும் என்று இந்திய மாணவர் சங்கம் நம்புகிறது.

இவ்வாறு அந்த அறிக்கையில கூறப்பட்டுள்ளது.

# திரைப்பட எரிப்பாளர்களை தி. மு. க. அரசு விட்டு வைப்பது ஏன்?

1976 தேர்தலைக் குறிவைத்து, எல்லாக் கட்சிகளும் தீவிர தயாரிப்புகளில் இறங்கியுள்ளன. இப்படி இறங்கியிருக்கின்றகட்சியினர் மக்களின் பிரசனைகள் மீது இயக்கம நடத்தினல், மக்களுக்கு நன்மை கிடைக்கும்.

தாக்குப் பிடிக்க முடியாத அளவுக்கு விலைவாசிகள் ஏறிப்போய். ஏழை, நடுத்தரக் குடும்பங்களெல்லாம் ஒடிந்து விழுந்து பஞ்சமும் பட்டினிச் சாவு அபாயமும் ஏற்பட்டுள்ள இன்றைய சூழ்நிலையில், இந்த ஆபத்திலிருந்து மக்களைப் பாதுகாப்பதுதான் உடனடிப் பிரச்சனையாகும்,

அடுத்து வேலையில்லாக் கொடுமையைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை. படித்து முடித்து விட்டு ஆண்டுக் கணக்கில் வேலையில்லாமல் அவதியும் அவமானமும் அடைந்து வரும் வாலிபர்களின் நிலைமை பரிதாபகரமாக உள்ளது. இவர்களுக்கு வேலை கொடு! வேலை கிடைக்கும் வரை இவர்கள் உயிர் வாழ நிவாரணம் கொடு! என்று போராட வேண்டியதும் உடனடிப் பிரச்சனையாகும்.

அதுமட்டுமின்றி தபால் கட்டணம் இரயில் கட்டணம் பஸ் கட்டணம், வரி உயர்வுகள் ஆகியவற்ருலும் நாட்டு மக்கள் படும் துன்ப துயரங்களுக்கு அளவே இல்லை. எனவே, இவற்றையெல்லாம் எதிர்த்துக் குறைக்கச் செய்ய வேண்டியதும் உடனடிப் பிரச்சனையாகும்,

மக்களை வாட்டும் இதுபோன்ற பிரச்சனைகளில், சில அரசியல் கட்சிகளும், அவர்களது பேரவைப்படைகளும் சில பத்திரிகைகளும் எப்படி நடந்து கொள்கின்றன?

இப்பிரச்சனைகளைப் பற்றி அவர்கள் மூச்சு விடுவதே இல்லை. அதைப் பற்றிய கவலை துளியும் இல்லாமல், தங்களது தேர்தல் குறிக்கோளுக்கு சினிமாதிரைகளைத் தீயிட்டுக் கொளுத்துவதை ஒரு இயக்கமாகவே நடத்தி வருகிருர்கள்.

திரு எம் ஜி ஆர் செல்வாக்குமிகுந்த ஒரு கட்சியின் தலைவராக விளங்குகிருர், அக்கட்சியை எதிர்க்க விரும்புகிறவர்கள். மக்களின் பிரச்சனைகளை முன வைத்து சந்திப்பதைப் பற்றி நாம் ஒன்றும் சொல்லவில்லை. ஆனல், அதற்கு மாருக அவர் பிறந்த இனத்தின் மீது பகைமைத் தீயை விசிறி விடுவதையும்—அவர் நடித்த படங்களைக் காட்டக் கூடாது என்று மறிப்பதும், மறிப்பதுடன் நில்லாமல் சினிமாத் திரைக்கு தீயிடுவதும், தியேட்டர் சொந்தக்காரர்களை மிரட்டுவதும் என்ருல் அது எந்த நியாயத்தைச் சேர்ந்தது எனறு கேட்கிரேம.

இந்திய நாட்டின் அரசியல் சட்டப்படி, தொழில் நடத்த உரிமை உண்டு. தியேட்டர் முதலாளிகளை மிரட்ட முடியாது. அப்படி மிரட்டினுல், அது சட்ட விரோதம்.

அதுபோலவே, படம் பார்க்கும் உரிமை, ஒவ்வொரு பிரஜைக்கும் உண்டு. எந்தப் படம் பார்க்கலாம், எந்தப் படம் பார்க்கக் கூடாது என்று யாரையும் யாரும் கட்டுப்படுத்த முடியாது. கட்டுப்படுத்துவது சட்ட விரோதம்.

இவ்வாறு தொழில் நடத்துவோரின் உரிமையையும் படம் பார்க்கும் மக்களின் உரிமையையும் பலாத்காரமாக பறித்திட ஒரு சிலர் பகிரங்கமாகவே முனைகின்றபோது, சட்டததையும் ஒழுங்கையும் காத்திடுவதே தங்கள் பண்பு என்று பறையடிககும் தி மு க அரசின் போலீஸார், வேடிக்கை பார்ப்பது ஏன்?

இரயில்வே வேலை நிறுத்தத்தின்போது, தொழிலாளர்களை ஒடுககிட, குண்டாந் தடிகளையும் கண்ணீர்வெடிகளையும சிறைககூடங்களையும தாராளமாகப் பயன்படுத்திய திமுக அரசுககு, திரை அரங்குகளுக்குப் பாதுகாப்பு கொடுகக ஆறறல் இல்லாமல போனது ஏன்?

அதே போலத்தான் அந்த இனவெறிப் படையினர், சென்னை அம்பத்தூரிலுள்ள சி. ஐ. டி. யூ அலுவலகத்தைத் தாக்கப் போவதாகவும் மிரட்டல் கடிதம் எழுதியிருக்கிருர்கள். இதுகுறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின தமிழ் மாநிலககுழு உறுபபினரும், சி ஐ டி யூவின் தமிழக உபதலைவருமான தோழர் வி. பி. சிந்தன் அவர்கள், முதலமைசசருக்கும் உயர் போலீஸ் அதிகாரிகளுக்கும் கடிதம எழுதியிருக்கிருர்.

இவ்வாறு எம். ஜி. ஆர் படங்களை மறிப்பதினுலும், சி. ஐ. டி. யூ அலுவலகங்களைத் தாக்கும் முயற்சிகளில் ஈடுபடுவதினுலும்- பெரும் மோதல்களுக்கான ஏற்பாடுகளைச் செய்து வருகிருர்கள்.

சட்ட விரோதச் செயல்களிலும், உழைப்பாளிகளுக்கு எதிரான நடவடிக்கைகளிலும் ஈடுபடும் இந்த வன்முறையாளர்களை தமிழக அரசு தடுத்து நிறுத்தாவிட்டால், அதனல் ஏற்படும் அனைத்து விளைவுகளுக்கும் தி மு க ஆட்சியாளர்கள்தான் பொறுப்பாளிகளாவார்கள்.

## குஜராத்

# மாணவர் தலைவர் கைது

ஆமதாபாத், ஜூன். 14—

குஜராத்தில் நடைபெற்ற மாணவர் — பொது மக்கள் கிளர்ச்சியை யொட்டி மந்திரிசபை கவிழ்ந்தது அல்லவா? இந்த கிளர்ச்சியில் முக்கிய பங்குவகித்த மாணவர் தலைவர் உமாகாந்த் மங்காட் கைது செய்யப்பட்டுள்ளார்!

இவர் நவநிர்மாண் சமிதி என்ற மாணவர் அமைப்பின் பொதுச் செயலாளராவார்.

ஒரு பொதுக்கூட்டத்தில் பேசிய மங்காட் "கொள்ளை லாபம் அடிப்பவர்களின் கடைகளை கொள்ளையடிக்க வேண்டுமென்றும், கவர்னர் கே. கே. விஸ்வநாதனை பழிவாங்க வேண்டுமென்றும் பேசினுராம்." இதை யொட்டியே இவர் கைது செய்யப்பட்டிருக்கிருர்.

மேலும் விலைவாசி உயர்வு எதிர்ப்பு ஊர்வலம் நடத்திய 5 மாணவர்கள் கைது செய்யப்பட்டுள்ளனர்.

## கருங்காலிகளுக்கு

# கை நிறைய சலுகை

புதுடெல்லி, ஜூன். 14—

சென்ற ரெயில்வே போராட்டத்தின் போது கருங்காலி வேலை பார்த்தவர்களுக்கு சலுகைகளை வாரி வழங்குகிறது அரசு. இவர்களில் பெரும்பான்மையோர் காங்கிரசின் ஐ.என்.டி. யூ. சி. சங்கத்தலைவர்களாகும்!

மொத்தம் 20 லட்சம் ரெயில்வே தொழிலாளர்களில் இந்த கருங்காலிகளின் எண்ணிக்கை 5 லட்சத்துக்கும் குறைவாகும்! மக்கள் பணத்தைஇவ்வாறு தங்களது அடியாடகளுக்கு செலவிட காங்கிரஸ் அரசுக்கு எந்த தயக்கமும் இல்லை.

### எட்டப்பன் பரம்பரை

கருங்காலிகளது பிள்ளைகளுக்கு வேலை வழங்குவதில் 20 சதவீத இடம் ஒதுக்கப்படுமாம். கருங்காலிகளின் பிள்ளைகளும், இனியொரு போராட்டம் வரும் போது கருங்காலி வேலை பார்ப்பார்கள் என்று அரசு நம்புகிறது. போலும்!

கருங்காலிகளுக்கு ஓய்வு பெறும் வயது மேலும் ஒரு வருடம் உயர்த்திக்கொடுக்கப்படுமாம்.

மேலும் இவர்களுக்கு சம்பளத்தில் உயர்வு ஏற்படுத்தப்படுமாம். இந்த சம்பள உயர்வை முன் பணமாகக் கொடுக்கவும் இரயில்வே அமைச்சகம் பகுதி நிர்வாகிகளுக்கு உத்திரவுகள் அனுப்பியுள்ளது, மேலும் கருங்காலிகளுக்கு பதவி உயர்வும் அளிக்கப்படுகிறது.

### பதிலடி என்பதில் ஐயமில்லை

ஆனல் வேலைநிறுத்தத்தில்கலந்து கொண்டோரை கடுமையாக பழிவாங்குகிறது நிர்வாகம். லட்சோப லட்சம் ஊழியர்களது இதுவரையிலான சர்வீசைப் பறித்து விட்டது அரசு.

மேலும் நாள் செல்லச் செல்ல டிஸ்மிஸ் செய்யப்படுவோர் எண்ணிக்கையும் அதிகரிக்கிறது.

அரசின் இந்த படு பிற்போக்குநடவடிக்கைகளுக்கு வீரமிக்க இரயில்வே தொழிலாளர்கள் சரியான பதிலடி கொடுப்பார்கள் என்பதில் ஐயமென்ன?

## தென் இரயில்வேயில்

# பழிவாங்கும்படலம் நீடித்தால் போராட்டம் வெடிக்கும்

சென்னை. ஜூன். 13—

இரயில்வே தொழிலாளர்களின் தேசீய ஒருங்கிணைப்புக் குழுவின் தென்மண்டல பிரிவு கூட்டம் நேற்று நடைபெற்றது. இக் கூட்டத்தில் பழிவாங்கும் நடவடிக்கைகள் தொடருமேயானல் நேரடி நடவடிக்கையில் இறங்குவது என்று முடிவு எடுக்கப்பட்டது.

ஜூலை 12-ந் தேதிக்குபின் எந்த நாளிலும் போராட்டம் வெடிக்கும் என்றும் எச்சரிக்கை விடுக்கப்பட்டுள்ளது.

1½ லட்சம் இரயில்வே தொழிலாளர்களின் கையொப்பம் கொண்ட மகஜர் இரயில்வே இலாகா ஜெனரல் மானேஜரிடம் கொடுப்பது எனறும் முடிவு செய்யப்பட்டுள்ளது.

### எதிர்ப்பு நாள்

மேலும், ஜூன் 18-ந் தேதியன்று தெற்கு இரயில்வேயில் 150இடங்களில் பழிவாங்கல் எதிர்ப்புநாள் அனுஷ்டிப்பது என்றும் முடிவு செய்யப்பட்டுள்ளது. அன்றைய தினம் ஊர்வலங்கள், பொதுக்கூட்டங்கள் நடத்தப்படும்.

இரயில்வே ஊழியர்கள் கறுப்பு பாட்ஜ் அணிந்து வேலைக்குச் செல்வர்.

இந்த கூட்டத்திற்கு நமசிவாயம தலைமை வகித்தார். தோழர் அனந்தன் நம்பியார், எம். கல்யாண சுந்தரம், ரத்தின சபாபதி ஆகியோரும்கலந்துகொண்டனர்.

## விலைவாசி உயர்வை எதிர்த்து

# ஆத்தூர் தாலுகாவில் பொதுக்கூட்டங்கள்

ஆத்தூர்,ஜூன்.13—

சேலம் மாவட்டம் ஆத்தூர் பகுதியில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் விலைவாசி உயர்வு எதிர்ப்புப் பொதுக்கூட்டங்கள் நடந்தன.

ஆத்தூர் கிரைன் பஜாரில் கடந்த 2-ந் தேதி நடந்த பொதுக் கூட்டத்துக்கு தோழர் ஏ.சுபான் தலைமை வகித்தார்.

தமிழ்நாடு அரசு பஸ் போக்குவரத்துத் தொழிலாளர் சங்கச் செயலாளர் சென்னை ஏ. சவுந்திரராஜன் விவசாயிகள் சங்கத்தின் சேலம் மாவட்ட செயலாளர்பி. தர்மலிங்கம்,தாலுகாச் செயலாளர் ஆர். வி. ராமசாமி, ஏ. அஜிஸ், எம்.ரங்கசாமி, கே. ராசு, டாக்டர் ஏ.கங்காதரன் ஆகியோர் பேசினர்.

### நரசிங்கபுரம்

இங்கு கடந்த 3-ந் தேதி தோழர் கே. சம்சுதீன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. இக்கூட்டத்தில் விவசாயிகள் சங்கத்தின் சேலம்—தர்மபுரி மாவட்டத் தலைவர் டாக்டர் கே. துரைசாமி, ஆத்தூர் தாலுகா செயலாளர் ஆர். பி. ராமசாமி, கே. ரங்கண்ணன கே. ராஜு, டாக்டர் ஏ. கங்காதரன், எம். ராஜ கோபால், கே. கபூர் ஆகியோர் பேசினுர்கள்.

### பெத்தநாயக்கன்பாளையம்

இங்குள்ள வீர வியட்நாம் திடலில் கடந்த 3-ம் தேதி தோழர் எஸ். சந்திரன் தலைமையில் பொதுக்கூட்டம் நடந்தது. தோழர்கள் சென்னை ஏ. சவுந்திரராஜன் பி. தர்மலிங்கம், ஆத்தூர் தாலுகா மார்க்சிஸ்ட் கட்சி செயலாளர் பி. ராஜு,எம். ரெங்கசாமி, கே. பொன்னுச்சாமி. மற்றும் ஸ்தல தோழர்கள் பேசினர்.

இக்கூட்டங்களில், விலைவாசி உயர்வுக்கும் மத்திய மாநில அரசுகளின் மக்கள் விரோதக் கொள்கைகளுக்கும் கண்டனம் தெரிவிக்கப்பட்டது. இரயில்வேத்தொழிலாளர் போராட்டத்துக்கு வாழ்த்துத் தெரிவித்து,அவர்களது கோரிக்கைகளை நிறைவேற்றும்படி வற்புறுத்தப்பட்டது.

## ஆஸ்பஸ்டாஸ் தொழிலாளர் ஊர்வலம்

போத்தனூர். ஜூன். 13—

போத்தனூர் ஆஸ்பஸ்டாஸ் தொழிலாளர் சங்கத்தின் சார்பில் கடந்த 10-ந் தேதி மாலையில் ஊர்வலமும் பொதுக்கூட்டமும்நடந்தது, போத்தனூர் இரயில் நிலையத்திலிருந்து புறப்பட்ட ஊர்வலத்துக்கு தட்சிண இரயில்வே எம்ப்ளாயீஸ் யூனியன் (டி. ஆர். இ. யூ) கிளைத் தலைவர் தோழர் வேலாயுதன் தலைமை வகித்தார்.

ஊர்வலம் முக்கிய வீதிகள் வழியே மேட்டூர் ஆஸ்பஸ்டாஸ்சங்கம்அடைந்தது அங்கு சி.ஐ டி.யூ.கிளைத்தலைவர்தோழர் வி. சின்னச்சாமி தலைமையில் பொதுக் கூட்டம் நடந்தது.

தமிழக சி. ஐ.டி. யூ. தலைவர் கே. ரமணி,அல்லா பக்ஸ்(தி. மு, க) ராமலிங்கம் மஸ்தூர் யூனியன்) மார்க்சிஸ்ட் கட்சி சார்பில் என்.வி தாமோதரன், தர்மநாதன், வி. சுப்பிரமணியம் ஆகியோர் ஆஸ்பஸ்டாஸ்தொழிலாளர்களின் கோரிக்கைகளை விளக்கியும்,இரயில்வே தொழிலாளர்களின் போராட்டம் குறித்தும் பேசினுர்கள்.

## மேலூர்

# பள்ளி ஆசிரியர்கள் திடீர் மாற்றம்

## பட்டதாரி ஆசிரியர் கழகம் எதிர்ப்பு

மதுரை, ஜூன். 13—

மேலூர் அரசு ஆண்கள் உயர்நிலைப் பள்ளியில், 6 பட்டதாரி ஆசிரியர்கள் வேறு இடங்களுக்குமாற்றம் செய்யபபட்டுள்ளதற்கு மதுரை மாவட்டப்பட்டதாரி ஆசிரியர் சழகம் எதிர்ப்புத் தெரிவிததுள்ளது.

கடந்த 10-ந் தேதியன்று இங்குள்ள என். ஜி, ஓ, யூனியன் கட்டிடத்தில் அவசரமாகக் கூடிய பட்டதாரி ஆசிரியர் கழக மதுரை மாவட்ட செயற்குழுக் கூட்டத்தில் இது குறித்து ஒரு தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. இடம் மாற்றம் செய்யப்பட்டுள்ள 6 பேரும் அப்பள்ளி வளர்ச்சிக்குப் பாடுபட்டவர்கள் என்றும் முறையான செயல்களைக் கையாளாமல் பல்வேறு இடங்களுக்கும்அவர்கள் மாற்றம் செய்யப்பட்டுள்ளனர் என்றும் குற்றம் சாட்டப்பட்டுள்ளது. மேலூர் பள்ளி மற்றும் மாணவர்கள் நலன் கருதி. தமிழக கல்வி இயக்குநர் இப்பிரச்சினையில் தலையிட்டு மாறுதல் ஆணைகளை உடனே ரத்துச்செய்யதக்க நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும் அத்தீர்மானத்தில் வற்புறுத்தப் பட்டுள்ளது.

மாவட்டத் துணைத்தலைவர் திரு எஸ். குப்புசாமிதலைமையில் நடந்த இக்கூட்டத்தில் தமிழக சட்ட மேலவைத் உறுப்பினர் திரு பி. ஆர் தாமசும் கலந்து கொண்டார்.

## "பெசண்ட் அண்ட் லேபர்"

# அலுவலகத்தோழர் காலமானுர்

புதுடெல்லி. ஜூன். 11—

புதுடெல்லியிலிருந்து வெளி வரும், அகில இந்திய விவசாயிகள் சங்கத்தின் ஆங்கில மாத இதழான "பெசண்ட் அண்டு லேபர்" அலுவலகத்தின் பொறுப்பாளராகப் பணியாற்றிவந்த தோழர் பிரமேந்திரா அவர்கள் கடந்த 5—6—74-ந்தேதி அன்று காலமானுர் என்பதை மிகவும்வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறேம்.

சுமார் 30 வயதே நிரம்பிய இளம் தோழர் பிரமேந்திரா புற்றுநோய் முற்றிய நிலையில் அறுவைச் கிகிச்சைககுப்பின் மரணம் அடைந்தார்.

அவரைப் பிரிந்து நிற்கும் அவரது குடும்பத்தாருக்கும் டெல்லித் தோழர்களுக்கும் அனுதாபத்தை தெரிவித்துக் கொள்கிறேம்.

## 'புரட்சிக்கார' கோடீஸ்வரி

# கொலை செய்யப்பட்டாள்

லாஸ்ஏஞ்சல்ஸ், ஜூன. 15—

இரண்டு மாதங்களுக்கு முன்னிருந்து பத்திரிகைகளில் அடிக்கடி இடம் பெற்று வந்த 'பெட்ரீஷியா ஹார்ஸட்' என்ற புரட்சிக்கார கோடீஸ்வரி கொலை செய்யப்பட்டிருக்கிருள்!

பெட்ரீஷியா இறந்துவிட்டாள் என்ற செய்தி ஜூன் 17 அன்று லாஸ்ஏஞ்சல்ஸ் ரேடியோ நிலையத்துக்குக் கிடைத்தது.

சிம்பயோனீஸ் விடுதலை முன்னணியினர் தங்களுக்கு இந்தச் செய்தியை அறிவித்ததாக ரேடியோ நிலையத்தைச் சேர்ந்தவர்கள் அறிவித்தனர்.

இதற்கு முன்னர் சானபிரான்ஸிஸ்கோவில் நடந்த ஒரு பயங்கர பாங்க் கொள்ளையில் பெட்ரீஷியாவும் சம்பந்தப்பட்டிருந்ததாக செய்திகள் வெளிவந்திருந்தன.

பெட்ரீஷியா, அமெரிக்காவிலுள்ள ஒரு பெரும் புத்தக வெளியீட்டு கம்பெனி அதிபரின் மகள் ஆவாள். பெப்ரவரி 4-ந் தேதி சிம்பயோனீஸ் விடுதலை முன்னணியினரால் இவள் கடத்திச் செல்லப்பட்டதாக கூறப்பட்டது.

பின்னர் தான் சிம்பயோனீஸ விடுதலை முன்னணியில் சேர்ந்து விட்டதாக பெட்ரீஷியாவே அறிவித்தாள்.

தத்துவப்பாடத்தை எடுத்து கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த பெட்ரீஷியாவுக்கு வயது 20.

கொலை பற்றிய மேல் விவரங்கள் கிடைக்கவில்லை,

# நடக்க இருப்பவை

**மதுரையில்**
**சர்வ கட்சி சார்பில்**
**போலீஸ் அடக்குமுறை**
**கண்டன ஊர்வலம்-பொதுக்கூட்டம்**

16—6—74 மாலை 7 மணிக்கு

முனிச்சாலையில்,

வி. கார்மேகம்
ப. நெடுமாறன்
ஏ. கணபதி
சி. பாண்டியன்
என். எஸ். வேலு
ஆர். வி. சேஷாச்சாரி
என். கே. பாகுலேயன்

மற்றும் பல தொழிற்சங்கத் தலைவர்கள் பேசுவர்.

**ஊர்வலம்**

மாலை 4 மணிக்கு முனிசாலையிலிருந்து ஊர்வலம் புறப்படும்.

**மதுரை**
**சிம்மக்கல்லில்**
**மே தின விழா**
முன்னிட்டு
**"செவ்வானம்"**
**நாடகம்**

17- 6- 74 திங்கள்
இரவு 10 மணிக்கு
வெண்மணி திடலில்
'தீக்கதிர்' ஆசிரியர்
தோழர் கே. முத்தையா
தலைமையில்

**மதுரை**
**'பீப்பிள்ஸ் தியேட்டர்சார்'**
அளிக்கும்
**"செவ்வானம்"**
நாடகம் நடைபெறும்,

## உங்களது பங்கை செலுத்தி விட்டீர்களா?

### மதுரை இரயில் போராட்ட வீரர் தியாகி ராமசாமி குடும்ப உதவி நிதி

1974 ஜூன் 8, 9 தேதிகளில் நடந்த மின்சார அணைக்கட்டுத் தொழிலாளர் சங்கத்தின் 6-வது மாநாட்டில், மதுரை இரயில் போராட்ட வீரர் தியாகி ராமசாமி குடும்ப உதவி நிதிக்காக ரூ. 206-85 வசூலானது,

விவரம் வருமாறு:

| | | |
|---|---|---|
| மேலாழியாறு சங்கக்கிளை | ரூ. | 46—00 |
| அப்பர் ஆழியாறு செல்லடான் | | 2—00 |
| ,, ,, சம்பந்தம் | | 2—00 |
| சோலையாறு சங்கக்கிளை | | 10—00 |
| கிளன்மார்கன் கிளை | | 10—00 |
| சோலையாறு பூவலிங்கம் | | 2—00 |
| ,, சோயிக்குட்டி | | 1—00 |
| ,, முத்து | | 3—00 |
| ,, கே. கே. தாஸ் | | 2—00 |
| பைகாரா கிளை, கோவை | | 10—00 |
| கிளன்மார்கன் கே. பி. பாலன் | | 1—00 |
| நெல்லித்துறை டி. கிருஷ்ணன் | | 1—00 |
| ,, கேசவன் | | 1—00 |
| ,, வையாபுரி | | 1—00 |
| ,, இ. டி. கிருஷ்ணன் | | 1—00 |
| கிளன்மார்கன் எம். குமரன் | | 1—00 |
| ,, டி. எஸ். சண்முகம் | | 1—00 |
| ,, பி. கே. ராமன் | | 1—00 |
| ,, டி. எம். ராமன் குட்டி | | 1—00 |
| அப்பராழியாறு எம். சிங்காரம் | | 1—00 |
| ,, டி. வெங்கிடசாமி | | 1—00 |
| ,, அழகப்ப கவுண்டர் | | 2—00 |
| ,, பழனிசாமி | | 1—00 |
| ,, டி. நடராஜன் | | 1—00 |
| ,, பாப்புட்டி | | 1—00 |
| ,, முத்துச் சாமி செட்டியார் | | 1—00 |
| ,, வி. ராமன் | | 1—00 |
| ,, பழனி | | 1—00 |
| பரளி. அழகிரிசாமி | | 2—00 |
| எச். இ. எஸ். சி. ராமுண்ணி | | 1—00 |
| ,, டி. பாஸ்கரன் | | 1—00 |
| ,, ஏ. வி. சாக்கோ | | 1—00 |
| ,, உன்னி கிருஷ்ணன் | | 3—00 |
| அப்பராழியாறு எம். வி. ராஜூ | | 1—00 |
| ,, சென்னிமலை கவுண்டர் | | 1—00 |
| பில்லூர் அணை சாமிதேவர் | | 1—00 |
| பைகாரா தாமஸ் | | 2—00 |
| கோத்தகிரி சுலைமான் | | 1—00 |
| நவமலை கிளை | | 7—00 |
| ஆலாந்துறை செக்ஷன் | | 7—00 |
| கணபதி ராமசாமி | | 1—00 |
| போத்தனூர் லோனன் | | 1—00 |
| கணபதி சிவராமன் | | 0—25 |
| திருப்பூர் கிளை | | 5—00 |
| கருமத்தம்பட்டி கிளை | | 1—00 |
| கணபதி சிவராமன் | | 1—00 |
| துடியலூர் பாண்டுரங்கன் | | 1—00 |
| காடாம்பாறை மாணிக்கம் | | 1—00 |
| போத்தனூர் சுகுமாரன் | | 1—00 |
| கிளன்மார்கன் சே. ராமசாமி | | 1—00 |
| அப்பர் ஆழியாறு பம்பையன் | | 1—00 |
| ,, எம். நம்பி | | 1—00 |
| துடியலூர் ஆர். எஸ். மணி | | 1—00 |
| காடாம்பாறை ராஜூ | | 1—00 |
| திருப்பூர் கருப்பசாமி | | 1—00 |
| காளிதாஸ், ஊழியர்சங்கம் போத்தனூர் | | 2—00 |
| குப்புராஜ் ,, ,, | | 2—00 |
| சி. ராஜன் கிளன்மார்கன்கிளை | | 10—00 |
| துடியலூர்கிளை மின்நிலைய தொழிலாளர்கள் | | 3—00 |
| கைத்தமலை, திருப்பூர் | | 1—00 |
| காந்திபுரம் ஹோ-சி-மின் மன்றம் | | 5—00 |
| பொதுக்கூட்டத்தில் தோழர் வி.பி.சி. அவர்களுக்கு மாலைக்காக வந்த தொகை தியாகி ராமசாமி நிதிக்கு | | 30—25 |
| ஒரு கிளன்மார்கன் தோழர் | | 0—35 |
| மொத்த வரவு | ரூ. | 206—85 |

நிதி அனுப்ப வேண்டிய முகவரி:

செயலாளர்.

சி. ஐ. டி. யூ. தமிழ் மாநிலக்குழு

விவேகானந்தர் தெரு :: பைபாஸ் ரோடு,

மதுரை - 625018

# உழைப்பாளர்கள் உழைக்குமிடங்களிலே.....

**உழைப்பாளி மக்களுக்கு— அவர்கள் நகர்ப்புறத் தொழிலாளர்களாயினும்சரி, கிராமப்புறத் தொழிலாளர்களாயினும்சரி—அவர்கள் உழைக்குமிடங்கள், வேலையின் தன்மை ஆகியவற்றால் ஏற்படும் நோய்களைப்பற்றிய கட்டுரையே இது. இந்த நோய்களின் பிடியிலிருந்து உழைப்பாளர்களைக் காக்க அரசாங்கமும், நிர்வாகங்களும் எவ்வித நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்பதையும் ஆங்காங்கு இக்கட்டுரையின் ஆசிரியர் குறிப்பிட்டுள்ளார்.**

**இக்கட்டுரையின் முதல் பகுதி கடந்த 6—6—74 இதழில் பிரசுரமாகியுள்ளது.**

ஏனைய மக்களோடு ஒப்பிடும்போது சுரங்கத் தொழிலாளர்களிடையே இரண்டு மடங்கு சாவு அதிகமாய் உள்ளது.

நிலக்கரி தூசுகளால் வரக்கூடியது. 'ஆந்திர கோசிஸ்' என்ற வியாதி.1952-ம் ஆண்டு இந்தியச் சுரங்கச் சட்டப்படி அம்மை, காலரா, போன்ற வியாதிகள் வந்தால் எப்படி அரசின் கவனத்திற்கு கொண்டு வரவேண்டுமோ — அவ்வாறு அரசின் கவனத்திற்குகொண்டுவரவேண்டிய வியாதியாகும், இந்த ஆந்திர கோசிஸ்''

1959-ம் ஆண்டு நிறைவேற்றப்பட்ட உழைப்பாளர் நஷ்டஈடு சட்டத்தின் கீழ் இவ்வியாதியும், குறிப்பிடப்பட்டுள்ளது.

### பெரும்பாதிப்பு பஞ்சாலைத் தொழிலாளருக்கே

இந்திய உழைப்பாளர்களில் 36 சதவீதத்தினர் பஞ்சாலை உழைப்பாளர்கள் ஆவர். இவர்களில் 7 முதல 8 சதவீதத்தினர் இந்நோயால்பீடிக்கப்பட்டுள்ளனர். இவர்களிடையே காச நோயும் அதிகம்.

இந்தியாவில், கரும்புச் சக்கைகளில் இருந்து காகித அட்டைகள் தயாரிக்கும் தொழிறசாலைகளும் உள. இந்தக் கரும்புச் சக்கைத் தூசுகளால் ஏற்படும் ''பேகோசிஸ்'' என்ற வியாதியை கங்குலிஅண்ட் பால் குழுவினர் கண்டு பிடித்து அறிவித்தனர்.

ஆந்திரா, பீகார், மைசூர், ராஜஸ்தான் ஆகிய இடங்களில் உள்ள நெருப்புப் பிடிக்காத ஆஸ்பெஸ்டாஸ் தயாரிக்கும் தொழிற்சாலைகளிலும் இவ்வித வியாதிகள் பரவலாய் உள்ளது.

இவ்வியாதியின் காரணமாய் விரல்களின் நகங்கள் கிளிமூக்குப்போன்று வளைகிறது. இருதயக் கோளாறுகள் ஏற்படும். இழைப்பு நோய் வரும்.

### அரசும் - முதலாளிகளும் முறையாக கடைப்பிடிக்க வேண்டிய தடுப்பு வழிகள்

காற்று மண்டலத்தில் தூசுகள் பரவவிடாமல் செய்தல், ஈரத்தன்மையை உண்டாக்குதல் வெண்டிலேட்டர் வசதிகள் செய்தல்—முதலியன செய்ய வேண்டும். மேலும் சுவாசக்கருவிகள் (ஆக்சிஜன் காற்றுடன் கூடிய) முகமூடிகள், மருத்துவர்கள் கண்காணிப்பு, முறையான மருத்துவச் சோதனைகள் இவைகள் எல்லாம் இலாப வேட்டையைக் கருதாமல்— உழைப்பாளர் நலன் கருதிச் செய்யப்பட வேண்டும்.

கரும்புச்சக்கையில் காளான்கள் பரவி அவை சுவாசப்பைகளைத் தாக்காமல் இருக்க—காளான்களை கொல்ல— 2 சதம் புரோப்யோனிக் அமிலம் கரும்புச்சக்கையின் மீது தெளித்து தொழிலாளரைப் பாதுகாக்க வேண்டும். இவ்வாறு செய்யப்படுகிறதா?

விவசாயத்தொழிலாளரிடையே— 80 சதம் வரும் நோய்கள் தானியத் தூசுகளும் காளான்களும் நுரையீரலைத் தாக்குவதால் வருபவைகளே.

### உலோகப் பொருட்களால் நஞ்சு

உலர் மின்கலங்கள், பாட்டரிகள் தயாரிப்பு, கண்ணுடித் தயாரிப்பு, கப்பல் கட்டுதல், அச்சகத் தொழில், இரப்பர் தொழில், பீங்கான் பானை தொழில், ஆட்டோமொபைல் போன்ற ஏராளமான தொழிற்சாலைகளில் ஆயிரக்கணக்கானவர்கள் டன் ஈயம், ஈயஆர்சனேட், ஈயஆக்சைடு, ஈயக்கார்பனேட் போன்றவை தண்ணீர் பட்டபாடாக உபயோகப்படுகிறது.

### டாக்டர் ரத்தினம்

இவற்றின் துகள்கள் சுவாசம்,உணவு, தோல் இவற்றின் மூலம் உடலில் பரவுகின்றன.

100 மில்லி லிட்டர் இரத்தத்தில் 25 மைக்ரோ கிராம் ஈயம்தான் இரத்தத்தில் இருக்கலாம். 60 மைக்ரோ கிராமுக்கு அதிகமாக இரத்தத்தில் இருந்தால் அது ஆபத்தை விளைவிக்கும்.

5 சதம் ஈயமானது—சிவப்பு அணுவுடன் கலந்து— கல்லீரல், சிறு நிரகம் இவற்றை அடையும் எலும்புகளில்போய் அடையும். இவை திசுக்களைப் போய் அடைவதால், நமது உணவின் கார்போஹைடிரேட் (சர்க்கரை) செரிக்கத் தேவையான என்சைம்களை தடுக்கிறது. முக்கிய தாது உப்பான பொட்டாசியக் குறைவுககும ஈயம் காரணமாகிறது.

இதனால் வயிற்றுவலி ஏற்படும். புரட்டிப் புரட்டி வலி எடுக்கும். மலச்சிக்கல், பசியின்மை ஏற்படும். பல்லீறுகள் ஊதா நிறமாக மாறும். சோகை நோய் வரும்; மணிக்கட்டு - பாதம் இவைகள் சொய்ந்து விழுந்த நிலையில் இருக்கும்.

தூக்கமின்மை — குழப்படியான மனநிலை போன்ற நரம்பு மண்டலத் தாக்குதலும் ஏற்படும். நல்ல சிவப்பணுக்கள் உட்கரு இல்லாமல் இருக்க வேண்டும். ஆனால் ஈயக் கோளாறால் சிவப்பணு உருமாறி — அளவு மாறி — உட்கரு உண்டாகி கெட்டு விடும

இந்த ஈய நஞ்சைத் தடுக்க — ஈய உலோகங்கட்குப் பதில் வேறு இரசாயனங்களை உபயோகித்தல்,

ஈயப்புகைகள் வரும் பிரிவுகளை தனியறைகளாக அமைத்து, புகை போக்கிகள் வைத்தல், ஒவ்வொரு தனி நபருக்கும் புகைகளின்று பாதுகாப்பு அளித்தல்.

அறையின் காற்றுமண்டலம் பரிசோதித்தல், அதாவது 10 கன மீட்டர் காற்றில் 2 மில்லி கிராமுக்கு மேல் ஈயம் கலக்க விடாதபடி செய்தல்—போன்ற நடவடிக்கைகளை கண்டிப்பாய் அமுல் படுத்த வேண்டும்.

### தொழில்துறைப் புற்று நோய்கள் —

உழைப்பாளருக்கு வரும் 75 சதவீத புற்றுநோய்கள் தோல் சம்பந்தப்பட்டவைகளே!

தாரிலிருந்து பகுத்து வடிக்கும் தொழில்கள், சூட்டடுப்பு, எண்ணெய் சுத்திகரிப்பு, சாயத் தயாரிப்பு, ரோடு வேலை செய்பவர்கள், புகைக் கூண்டுகளில் வேலைசெய்பவர்கள் ஆகியோருக்கு இவ்வியாதிகள் வருவது உண்டு. விரைப்பையிலும் புற்று நோய் வரும்.

வாயுக்கள் தயாரிக்கும் தொழிற்சாலை ஆஸ்பெஸ்டாஸ் தொழிற்சாலை ஆகியவற்றில் பணிபுரிபவர்களுக்கு நுரையீரல் புற்று நோய் வரும்.

அரோமேடிக் அமைன், அனிலின் போன்ற சாயத் தொழிற்சாலைகளிலும் ரப்பர், எலெக்டிரிக்கேபிள் தொழிற்சாலை ஆகிய இடங்களிலும் வேலை பார்ப்போருக்கு தோல் புற்றுநோய் வரும்.

கதிர்வீச்சுப் பொருட்கள், பென்சால், எக்ஸ்ரே முதலியன புழங்கப்படும் இடங்களில் உள்ளோருக்கு இரத்த ''லுக்குமியா'' எனப்படும் வெள்ளணுப் புற்றுநோய் வரும்.

இவ்விதம் புற்றுநோய்களிலிருந்து தொழிலாளரைப் பாதுகாகக, மருத்துவப் பரிசோதனை செய்தல, பாதுகாப்புக் கருவிகள் வழங்குதல், தொழிற்சாலைகளைக் கண்காணிததல ஆகிய நடவடிக்கைகள் மிக மிக இன்றியமையாதன.

### தோல் அழற்சி

வெப்பம், குளிர்ச்சி, ஈரம், உராய்வு, அதி அழுத்தம், எக்ஸ்ரே இதன் காரணங்களால் தோல் பாதிக்கப்படும்.

அமிலம், காரம், சாயம், கிரீஸ், தார், குளோரின் போன்றவற்றாலும் தோல் அழற்சி ஏற்படும்.

இந்த வியாதி பீடிக்காதவாறு தொழிலாளருக்கு பாதுகாப்பு அளிக்கப்படுவதில்லை. மாறாக, இதனால் ஏற்படும உடல் நலக் குறைவை சாக்காகச் சொல்லி அவர்களை வேலையை விட்டு விரட்டும் நிலைமைதான் தற்போது உள்ளது.

உழைப்பாளருக்கு இவ்வியாதிகள் வராமல் தடுக்க—அங்கிகள், கையுறைகள், காலுறைகள், தனி ஆடைகள். பாதுகாப்புத் தற்காப்புக் கிரீமகள் ஆகியன அளிக்கப்படல் வேண்டும்.

பாக்டரிச் சட்டப்படி,தனிநபர்சுகாதாரம் பேண வெந்நீர்வசதியும், சுத்தப்படுத்தப்பட்ட தண்ணீர் வசதியும் அளிக்கப்பட வேண்டும்.

பரம்பரைப் பாதிப்பு' பிறவிக் கோளாறுகள் அடங்கியன எக்ஸ்ரேயில் வேலை பார்ப்போருக்கு வரலாம். பிரசவ காலத்தில் அவர்களை வேலையை விட்டு நீக்காமல் பேறுகாலச் சலுகைகள் அளித்தல் வேண்டும்.

இன்று விவசாயம் இயந்திரமயமாகி வருகிறது.

டிராக்டர்கள்—மின்சார மோட்டார்கள் இவற்றால் — எந்தவித பயிற்சியும் பாதுகாப்பும் இல்லாததால் விபத்துகள் ஏற்படுகின்றன.

விஷ விலங்குகள்—நஞ்சு மருந்துகள், உரங்கள் — பூச்சி கொல்லி மருந்துகள் இவற்றால் விபத்துகள்!

காளான் நோய்களின் தாக்குதல், கொக்கிப் புழுவால் ஏற்படும் சோகை நோய் விவசாயத் தொழிலின் சிறப்பு அம்சம். விவசாய நாடாகிய இந்தியாவின் நிலைமை பாருங்கள்!

### தொழிற்சாலைகளில் தொழிலாளருக்கு விபத்துகள்

வருடந்தோறும் விபத்துக்களால் மட்டும் 30 லட்சம் மனித நாட்கள் இழக்கப்படுகின்றது.

இதில் 92 சதம் தற்காலிகத் தொந்தரவுகள் 6 சதம் நிரந்தரப் பாதிப்பு மற்றும் 2 சதம் இறப்புக்கள் ஏற்படுகின்றன.

உழைப்பாளருக்கு மருத்துவ வசதிகள் நட்ட ஈடுகள் என்பதெல்லாம்—ஏதோ 'தலைவிதி' என்ற அடிப்படையில் தான் அளிக்கப்படுகின்றன.

மிக இளவயதினர் அல்லது அதிக வயதானவர்கள் அதிகம் பாதிக்கப்படுகின்றனர். வேலை நேரம்அதிகமாகி அதிகமாகி களைப்பு மீறி விபத்துக்கள் வருகின்றன. வேலைப்பளு மிக முக்கியக்காரணமாகும்.

அதிக வெப்பம்— குறைந்த வெளிச்சம், அதிக இரைச்சல்— பாதுகாப்பற்ற எந்திரங்கள் (இதனால் 10 முதல் 20 சதவிபத்துக்கள்) நெருக்கடியான சூழ்நிலை— இடவசதியின்மை இவற்றாலும், பயிற்சி அளிக்கிறோம் என்று கூறி வேலைத்திறன் உறிஞ்சப்படுவதாலும் பாதுகாப்புப்பகுதிகள் இல்லை என்பதாலும் விபத்துக்கள் அதிகம.

தொழிற்சாலைகளின் கழிவுப்பொருட்கள்— அமிலம. காரம் இவற்றின் வாயுக்களால்— கதிர்வீச்சுப் பொருட்களால் சட்டங்கள் விட்டங்களில் சொருகப்படுவதால்— அரசின் நிர்வாகச்சீர்குலைவால்— லாப வேட்டையையே குறிக்கோளாய்க் கொண்ட தொழில் நுணுக்க முறைகளால்— காற்று மண்டலமும், தண்ணீரும் விஷமாக்கப்படுகின்றன.

திருச்சி எரிசாராயத் தொழிற்சாலைக் கழிவு— காவேரியுடன் கலநது விவசாயிகளைப பாதித்தது. அவர்கள் இதனைஎதிர்த்துப் போராடினர்.

ஜப்பானில் உள்ள தொழிற்சாலைமுதலாளிகள கழிவுப் பொருட்களை தண்ணீருடனகலந்ததால்--மீன்கள செத்துமடிந்தன தங்களது வயிறறுப் பிழைப்புககு உலை வைத்த இக்கொடுமையை எதிர்தது மீனவர்கள் பெரும் ஆர்ப்பாட்டம நடத்த வேண்டியதாகியது— தொழிற்சாலைகள் பரவலாக்கபபடாததால் போக்குவரத்து நெருக்கடிகளும் ஏற்படுகின்றன. நகர்ப்புறம நெருக்கடியாயிறறு. சுகாதாரக் குறைவு ஏறபடுகிறது. தொழிலாளர் சேரிகளில்—தொற்று நோய்கள் ஏற்படுகின்றன. காற்றுமண்டலம் புகைமண்டலமாய் ஆகிவிடுகிறது.

# இந்திய-சீன உறவு ஒழுங்கு படுமா?

ஹாங்காங், ஜூன்.15—

சீன கம்யூனிஸ்ட் கட்சியின் உதவித் தலைவரான யே—சின்—யிங், ''சீன மக்களுக்கும், இந்திய மக்களுக்கும் இடையே இருந்த நீண்டகால உறவு மேலும் அபிவிருத்திப்படவேண்டும்' என்று கருத்து தெரிவித்துள்ளார்.

இத்தகவலை பீகிங் ரேடியோ நிலையம் ஒலிபரப்பியது.

திரு டானியல் லத்தீப் தலைமையில் சீனாவில் சுற்றுப்பயணம் செய்துகொண்டிருக்கும் இந்திய குழுவிடம் பேசிக்கொண்டிருக்கும் போது, 'யே-சின்-யிங்' இந்தக் கருத்தை வெளியிட்டிருக்கிறார்.

''இந்திய மக்களுக்கும், சீன மக்களுக்கும் இடையே இருந்த நட்புறவு பற்றி ஒரு நீண்ட சரித்திரமே உள்ளது. இது மேலும் தொடர வேண்டும; அபிவிருத்திப் படுத்தப்பட வேண்டும்''

இவ்வாறு சீன உதவி தலைவர் கூறியிருக்கிறார்.

## தோழர் காஸ்மி காலமானர்

லட்சுமணபுரி,ஜூன்.14— உத்திரபிரதேஷ் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி தலைவரான தோழர் பிஸ்லே அப்பாஸ் காஸ்மி ஜூன் 11-ந் தேதி மரணமடைந்தார். அவருக்கு வயது34.

40 வருடகாலமாக தோழர்காஸ்மி கம்யூனிஸ்ட் கட்சியின் உறுப்பினராக இருந்து வந்துள்ளார்.

அரசு வாய் திறந்தால்

# அனைத்து விலைகளும் ஏறுகின்றன

எந்தப் பொருளின் விலையைப்பற்றியேனும்நமது இந்திராஜியின் 'சோசலிச அரசு' ஆலோசனை நடத்தினாலே போதும், அந்தப் பொருளின் விலை ஏறி விடுகிறது.

கோதுமை மொத்த வர்த்தகத்தை ஏற்றெடுக்கப் போகின்றோம் என்றார்கள்; பெருமளவில் கோதுமை கொள்முதல் செய்யப் போகின்றோம் என்றார்கள் அவ்வளவுதான் மார்க்கெட்டுகளிலிருந்து கோதுமை மறைந்தே விட்டது.

### மாயமாய் மறைந்த மர்மம்

''சோப்புகளின் விலையை உயர்த்த அனுமதி அளித்தால் 'சோப்பு உற்பத்தி பெருகும். அப்பொழுது சோப்பு விலை இறங்கும்'' என்றது மத்திய அரசு. அறிவிப்பு வந்ததுதான் தாமதம். கடைகளிலிருந்த சோப்புகள் எல்லாம் மாயமாய் மறைந்தன.

'ஒயிட் பிரிண்டிங் பேப்பர்' மொத்த உற்பத்தியில் 25 சதவீதம் உற்பத்தியாளர்களிடமிருந்து அரசு வாங்கும் என்ற செய்தி வந்தது.

அவ்வளவுதான் அரசு நிர்ணய விலை ரூ. 2500 ஆகவும் மார்க்கெட் விலை ரூ 3500 ஆகவும் இருந்த ஒரு டன் ஒயிட் பிரிண்டிங் பேப்பர் 5ஆயிரம் ரூபாயாக உயர்ந்தது.

'வனஸ்பதி' என்று அரசு வாயைத் திறக்கும்போதெல்லாம், வனஸ்பதி விலை வானத்தை நோக்கி உயர்கிறது. இந்த வாரத்தில் மட்டும் ஒரு கிலோ வனஸ்பதியின் விலையில் ரூபாய 3 உயர்வு ஏற்பட்டிருக்கிறது.

இப்பொழுது ரொட்டி உறபத்தி செய்யும் நிறுவனங்களுக்கு மைதா மாவு ஒதுக்குவது பற்றி அரசு மட்டத்தில் பேச்சுவார்த்தை நடக்கிறது. ஆம்! ரொட்டி விலையும் ஏறப்போகிறது.

### யாருக்காக ஆட்சி

இந்த பொருட்களை எல்லாம் உற்பத்தி செய்யும் ஆலை அதிபர்களுக்கும்— இந்திரா அரசுக்கும இருக்கின்ற உறவுதான் இந்தக் குபீர் விலை ஏற்றத்திற்கு முக்கியக் காரணம். ஏதேனும் ஒரு பொருளின் விலை குறித்து அரசு பேசுகிறது என்றால், அந்தப் பொருளின விலையை உயர்த்த முதலாளிகளுக்கு பச்சை விளக்கு காட்டி விடடுத்தான், இவர்கள் பேசுகிறார்கள் என்று பொருள்.

தொழிலாளி விலைவாசி உயர்கிறது வாழ முடியவில்லை என்று கூலிஉயர்வு கேட்டால் அது தேசத் துரோகம் என்று கூறி வாயடைக்கிறார்கள்.

ஆனால் முதலாளிகள் மூலப் பொருட்களின் விலை உயர்ந்து விட்டது. எனவே உற்பத்திப் பொருட்களின் விலையைக் கூட்ட வேண்டும்' என்றுகேட்டால் உடனே தலையை ஆட்டுகிறார்கள்.

''உற்பத்தி முடங்காமலிருக்க (தேச நலனுக்காக) விலையை உயர்த்த அனுமதிக்கிறோம்' என்று ஆணையிடுகிறது அரசு.

இப்பொழுது சொல்லுங்கள் இவர்கள் யாருக்காக ஆட்சி நடத்துகிறார்கள்?

# ஜனாதிபதி தேர்தல்

வருகிற ஆகஸ்ட் 24-ம் தேதிக்குள் நமது நாட்டுக்கு புதிய ஜனாதிபதி தேர்ந்தெடுக்கப்பட வேண்டும்.

இதற்கு முன்பு 1969-ல் நடந்த ஜனாதிபதி தேர்தல் 1961-ம் வருட மக்கட் தொகைக் கணக்கெடுப்பின் அடிப்படையில் நடந்தது.

ஆனால் இவ்வாண்டு நடக்கவிருக்கும் ஜனாதிபதி தேர்தல், 1971-ஆம் ஆண்டு மக்கட் தொகைக் கணக்கெடுப்பின் அடிப்படையில் நடக்கிறது.

## வாக்களிப்பது யார் யார்?

ஜனாதிபதித் தேர்தலில், தேர்ந்தெடுக்கப்பட்ட நாடாளுமன்ற உறுப்பினர்களும் மாநிலங்களவை (ராஜ்ய சபை) உறுப்பினர்களும் மாநில சட்டமன்ற உறுப்பினர்களும் தான் வாக்களிக்க முடியும்.

தேர்ந்தெடுக்கப்படாத நியமன உறுப்பினர்களோ, மாநில சட்ட மேலவை உறுப்பினர்களோ (எம். எல். சி) வாக்களிக்க முடியாது.

அதே போன்று யூனியன் பிரதேசங்களைச் சார்ந்த சட்டமன்ற உறுப்பினர்களுக்கும் வாக்குரிமை கிடையாது.

## வாக்குகள் உயர்வு

1969-ல் நடந்த ஜனாதிபதி தேர்தலின் போது மொத்த வாக்குகளின் மதிப்பு 8 லட்சத்து 61 ஆயிரத்து 695 ஆக இருந்தது அது. இப்போது 10 லட்சத்து 82 ஆயிரத்து 886 ஆக உயர்ந்துள்ளது.

அதாவது 2 இலட்சத்து 17 ஆயிரத்து 791 அதிகம்.

கடந்த தேர்தலின் போது ஒரு எம். பி, யின் ஓட்டு 526 வாக்குகளுக்குச் சமமாக இருந்தது.

அந்த மதிப்பு இப்போது 721 ஆக உயர்ந்துள்ளது.

## காரணம் என்ன?

இதற்குக் காரணம் என்ன?

1969-ஆண்டுத் தேர்தலின் போது 17 மாநிலங்களே இருந்தன. இந்த 17 மாநிலங்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட மொத்த உறுப்பினர்களின் எண்ணிக்கை 3389 ஆகும்.

ஆனால் 1969-ஆம் ஆண்டு ஜனாதிபதித் தேர்தலுக்குப் பின்னால் இமாசலப் பிரதேசம், மேகாலயா, மணிப்பூர், திரிபுரா ஆகிய நான்கு புதிய மாநிலங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

இமாசலப் பிரதேசத்தில் 68 உறுப்பினர் கொண்ட சட்டமன்றமும், மேகாலயாவில் 60 உறுப்பினர் கொண்ட சட்டமன்றமும் மணிப்பூரில் 60 உறுப்பினர் கொண்ட சட்டமன்றமும் — திரிபுராவில் 60 உறுப்பினர் கொண்ட சட்டமன்றமும் செயல்பட்டு வருகின்றன.

ஆக இம்மாநிலங்களின் மொத்த சட்டமன்ற உறுப்பினர் எண்ணிக்கை 248. தவிர ஒரிசாவின் சட்டமன்ற உறுப்பினர் எண்ணிக்கை 1969 தேர்தலுக்குப்பின்னர் 140லிருந்து 147-ஆக உயர்ந்துள்ளது.

ஆகவே 1969-ம் ஆண்டு தேர்தலின் போது இருந்த தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையை விட இந்த ஆண்டு 255 உறுப்பினர்களின் எண்ணிக்கை கூடுதலாகிறது. ஆக மொத்தம் 3654 ஆகும்.

## ஓட்டு மதிப்பு எவ்வாறு கணக்கிடப்படுகிறது?

அந்தந்த மாநிலங்களின் மக்கட் தொகையின் அடிப்படையில், அந்தந்த மாநில சட்டமன்றத்தில் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர் ஒவ்வொருவரது வாக்கும் இத்தனை வாக்குகளுக்குச் சமம் என்று மதிப்பிடப்பட்டுள்ளது. இந்த வாக்குகளின் மதிப்பு மாநிலத்துக்கு மாநிலம் வேறுபடும்.

அதாவது,

ஒரு மாநிலத்தின் மொத்த மக்கட் தொகையை- அம்மாநில சட்டமன்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கையை ஆயிரத்தால் பெருக்கி வரும் தொகையால் வகுத்தால் வரும் ஈவுத் தொகை எவ்வளவோ, அந்த ஈவுத்தொகையே, அம்மாநில சட்டமன்ற உறுப்பினர் ஒவ்வொருவரது ஓட்டின் மதிப்பு ஆகும்.

## உதாரணத்திற்கு தமிழ்நாடு

உதாரணமாக தமிழ் நாடு சட்டமன்றத்தில் தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை 234 ஆகும். அதை ஆயிரத்தால் வகுத்தால் 2 இலட்சத்து 34 ஆயிரம் ஆகும்.

தமிழகத்தின் மக்கட் தொகை 4 கோடியே 11 லட்சத்து 3 ஆயிரத்து 121 ஆகும்.

இதை 2,34,000-ஆல் வகுத்தால் வரும் தொகை சற்றேறக்குறைய 176 ஆகும். இந்த 176 தான், ஜனாதிபதி தேர்தலில் தமிழக எம். எல். ஏ. ஒருவர் போடும் ஓட்டின் மதிப்பு ஆகும்.

இது பற்றிய அட்டவணை வருமாறு:—

| மாநிலம் | தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்ற உறுப்பினர்களின் மொத்த எண்ணிக்கை | ஒரு உறுப்பினரது ஓட்டின் மதிப்பு | மொத்த மதிப்பு |
|---|---|---|---|
| ஆந்திரப்பிரதேசம் | 287 | 152 | 43,624 |
| அஸ்ஸாம் | 114 | 128 | 14,592 |
| பீகார் | 318 | 177 | 56,286 |
| குஜராத் | 182 | 147 | 26,754 |
| ஹரியானா | 81 | 124 | 10,044 |
| இமாசலப்பிரதேசம் | 68 | 51 | 3,468 |
| ஜம்மு—காஷ்மீர் | 75 | 59 | 4,425 |
| கேரளம் | 133 | 161 | 21,413 |
| மத்தியப் பிரதேசம் | 296 | 141 | 41,736 |
| மகாராஷ்டிரம் | 270 | 187 | 50,490 |
| மணிப்பூர் | 60 | 18 | 1,080 |
| மேகாலயா | 60 | 17 | 1,020 |
| நாகாலாந்து | 60 | 9 | 540 |
| கர்னாடகம் | 216 | 136 | 29,376 |
| ஒரிசா | 147 | 149 | 21,903 |
| பஞ்சாப் | 104 | 130 | 13,520 |
| ராஜஸ்தான் | 183 | 140 | 25,760 |
| தமிழ்நாடு | 234 | 176 | 2,41,[illegible]84 |
| திரிபுரா | 60 | 26 | 1,560 |
| உத்தரப்பிரதேசம் | 425 | 208 | 88,400 |
| மேற்கு வங்கம் | 280 | 158 | 44,240 |

ஆக மொத்தம் 21 மாநிலங்களில் உள்ள தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்ற உறுப்பினர்களது வாக்குகளின் மொத்த மதிப்பு 5 லட்சத்து 41 ஆயிரத்து 415 ஆகும்.

(இந்த மதிப்பு 1969-ல் 4 இலட்சத்து 30 ஆயிரத்து 847 தான்.)

நாடாளுமன்றத்திற்கு மக்களால் நேரடியாகவும், மாநிலங்கள் அவைக்கு சட்டமன்ற உறுப்பினர்களாலும் எம். பிக்கள் தேர்ந்தெடுக்கப்படுவதால்— நாடாளுமன்றம், மாநிலங்கள் அவை ஆகிய இரு சபைகளின் மொத்த உறுப்பினர்களது வாக்குகளின் மொத்த மதிப்பானது நாடு முழுவதும் தேர்ந்தெடுக்கப்பட்ட சட்டமன்ற உறுப்பினர்களின் மொத்த வாக்குகளின் மதிப்புக்கு ஏறக்குறைய சமமாகும்.

524 உறுப்பினர்கள் கொண்ட நாடாளு சட்டமன்றத்துக்கு மக்களால் நேரடியாக தேர்ந்தெடுக்கப்பட்ட உறுப்பினர்கள் 521. மாநிலங்களவையில் உள்ள 235 உறுப்பினர்களில், சட்டமன்ற உறுப்பினர்களால் தேர்ந்தெடுக்கப்படுபவர்கள் 230 பேர். ஆக மொத்தம் 751 பேர். இவர்களின் ஒவ்வொருவரதுஓட்டும் 721 ஓட்டுக்களுக்குச் சமம்.

521 நாடாளுமன்ற உறுப்பினர்களுடைய வாக்குகளின் மொத்த மதிப்பு 3 இலட்சத்து 75 ஆயிரத்து 641. 230 மாநிலங்களவை உறுப்பினர்களது வாக்குகளின் மொத்த மதிப்பு 1 இலட்சத்து 65 ஆயிரத்து 830. ஆக மொத்தம் 5 இலட்சத்து 41 ஆயிரத்து 471 ஆகும்,

(1969 ஆம் ஆண்டுத் தேர்தலில் இந்த மதிப்பு 4 இலட்சத்து 30 ஆயிரத்து 848 தான்.)

## குஜராத் நிலை என்ன?

குஜராத் சட்டமன்றத்தின் எண்ணிக்கை தற்போது 168 ஆகும்; அதற்கு எப்பொழுது தேர்தல் நடந்தாலும் அதன் உறுப்பினர் எண்ணிக்கை 182 ஆக உயர்த்துவது என்று ஏற்கனவே முடிவு செய்யப்பட்டுள்ளது.

ஆனால் தற்போது குஜராத் சட்டமன்றம் கலைக்கப்பட்டுவிட்டது. அதன் உறுப்பினர்கள் பதவியிழந்து வாக்களிக்கத் தகுதியற்றவர்களாகிவிட்டனர். இருப்பினும் ஜனாதிபதி தேர்தலுக்கான மொத்த சட்டமன்ற உறுப்பினர்களது எண்ணிக்கையில் குஜராத் சட்டமன்ற உறுப்பினர்களின் எண்ணிக்கையும் மொத்த ஓட்டுத் தொகையில் அவர்களது மொத்த ஓட்டின் மதிப்பானது 26 ஆயிரத்து 754-ம் அடங்கும்.

ஆனால் குஜராத் எம். எல். ஏக்கள் வாக்களிக்க முடியாததால், அவர்களது ஓட்டுக்கள் பதிவுசெய்யப்பட மாட்டாது.

# கொட்டிக் கவிழ்க்க வேண்டிய ரயில்வே போர்டை

# தட்டிக் கொடுக்கிறார் மிஸ்ரா

இரயில்வே ஜெனரல் மானேஜர்களின் மாநாடு, இம்மாதம் 13-ம் தேதியன்று புதுடில்லியில் நடந்தது.

அப்போது, இரயில்வே மந்திரி மிஸ்ரா, அந்த ஜெனரல் மானேஜர்களை ஒரு தூக்கு தூக்கினார். ஏனென்றால், வேலை நிறுத்த காலத்தில் கருங்காலி ரயில்களை ஓட்டுவதில் அரும்பாடு பட்டவர்கள் அல்லவா!

நாட்டிலே ஒரு பெரும் புகார் இருந்து வருகிறது. 'இந்தியன் எக்ஸ்பிரஸ்' போன்ற பத்திரிகைகள் கூட — புகார் கூறி இருக்கிறது. தொழிற்சங்கத் தலைவர்களெல்லாம் புகார் கூறியிருக்கிறார்கள். பார்லிமெண்டிலே கூட புகார் கிளம்பியது.

## ஏகப்பட்ட புகார்கள்

என்னென்ன புகார்கள்?

இந்த ஜெனரல் மானேஜர்களும், ரயில்வே போர்டு உறுப்பினர்களும் மரமண்டைகள்! தொழிலாளர்களுடைய கஷ்ட நஷ்டங்களைக் கண்டு, மனித உணர்வுடன் தீர்த்து வைக்க மறுக்கிற அரக்கர்கள்! எதற்கெடுத்தாலும் கட்டுப்பாட்டின் பேரால், தொழிலாளர்களை அடிமைகளாகக் கருதி பழிவாங்குகின்ற காட்டு ராஜாக்கள்! லஞ்ச லாவண்யங்களிலும், ஊதாரித்தனத்திலும், பாரபட்ச நடவடிக்கைகளிலும் கூசாமல் இறங்குகின்ற அதிகார வர்க்கங்கள்!

இவர்களுக்கு மாறிவரும் உலகத்தைப் பற்றியோ, சோசலிசக் கொள்கையை பற்றியோ ஒன்றுமே தெரியாது. இவர்களால் தான் இரயில்வேயில் பெருந் திருட்டுகளும் விரயங்களும் ஏற்படுகின்றன.

எனவே இந்த இரயில்வே போர்டையே தொலைத்துத் தலைமுழுக வேண்டும் என்று ஒரு புகார் அல்ல, இரு புகார் அல்ல. ஓராயிரம் புகார்கள் கிளப்பப்பட்டுள்ளன.

இந்த இரயில்வே வேலை நிறுத்தமே இவர்களது பிடிவாதத்தனத்தினாலும், முரட்டுத்தனத்தினாலும்தான ஏற்பட்டது.

## மிஸ்ரா தூக்குகிறார்

இப்படிப்பட்ட ஜெனரல் மானேஜர்களைப் பற்றியும், போர்டு அதிகாரிகளைப் பற்றியும் இரயில்வே மந்திரி மிஸ்ரா என்ன கருதுகிறார், பாருங்கள்!

புத்திசாலித்தனமான நிருவாகம் என்று புகழ்கிறார். இந்த நிருவாகத்துக்கு தொழிலாளர்களைச் சரியான முறையில் வழிநடத்தக் கூடிய தொழிற்சங்கத்தின் உதவிதான் தேவை என்று இம்மாநாட்டில் பேசியிருக்கிறார்.

மிஸ்ராவின் கருத்துப்படி, தொழிலாளர்களைச் சரியான முறையில் வழிநடத்தக் கூடிய சங்கம் எது? அதுதான் காங்கிரஸ் கட்சி நடத்துகின்ற தேசிய சம்மேளனம். தொழிலாளர்கள் ஊதிய உயர்வு கோரி போராட்டம் நடத்தினால், அதை உடைக்க கருங்காலி சப்ளை செய்வது இதன் வேலை.

## மீண்டும் குமுறுவார்கள்

வறட்டுப் புத்தி படைத்த அதிகார வர்க்கமும், கருங்காலி சப்ளை செய்யும் சங்கத் தலைமையும் கூட்டுச் சேர்ந்தால், அது எப்படி இருக்கும்? இப்படிப்பட்ட ஜோடிகளைக் கூட்டி வைக்கும் மிஸ்ராவின் புத்தி எப்படி இருக்கும்?

ஆகவே, ரெயில்வே தொழிலாளர்கள், தங்களின் முக்கிய கோரிக்கைகளான — பொதுத்துறைத் தொழில்களுக்குச் சமமான சம்பளம், போனஸ்— ஆகிய கோரிக்கைகளை அடைய, இவர்களை எதிர்பார்த்தால் முடியாது. மீண்டும் மீண்டும் ஒற்றுமையைக்கட்டி, தொடர்ந்து கிளர்ச்சிகளும், ஆர்ப்பாட்டங்களும், பல்வேறு வகைகளில் போராட்டங்களும் நடத்தி தான் ஆகவேண்டும்.

# பழிவாங்குவதை...

1-ம் பக்கத் தொடர்ச்சி

லாளர்களையும் நிறுத்தி விட்டார்கள்.

## கருங்காலி ரயில்களை ஓட்டியவர்களுக்கு பரிசாம்

ஒருபுறம், தொழிலாளர்கள் மீது இவ்வாறு பழிவாங்கல் நடக்கும் போது, மறுபுறம் கருங்காலி ரயில்களை ஓட்டியவர்களுக்கு அரசாங்கம் சலுகைமேல் சலுகைகளும், பரிசுமேல் பரிசுகளும் வழங்கி வருகிறது.

அந்தச் சலுகைகள் என்ன? பரிசுகள் என்ன?

இந்த ஜூன் மாதச் சம்பளத்திலிருந்தே அந்த விசுவாசிகளுக்கு அட்வான்ஸ் இன்கிரிமென்ட் (சம்பள உயர்வு) கொடுப்பதாக அறிவித்துள்ளார்கள்.

இருக்கிற வேலைகளிலும், புதிதாகவேலை வாய்ப்புக்களை உருவாக்கியும், இந்த வேலைகளில் 20 சத வேலைகளை இந்த விசுவாசிகளின் வாரிசுகளுக்கு கொடுக்கப்போவதாகவும் அறிவித்திருக்கிறார்கள்.

ஜெனரல் மானேஜர்களே நியமித்துவிட்டு, அதைத் தொடர்ந்து இரயில்வே சர்வீஸ் கமிஷனிடம் அனுமதியும் வாங்கிக் கொள்ளலாம் என அரசாங்கம் ஜெனரல் மானேஜர்களுக்கு அதிகாரம் வழங்கியுள்ளது.

அதுமட்டுமின்றி, இந்த விசுவாசிகள் ரிட்டையர் தேதிக்குப் பிறகும், ஒரு வருடம் வேலை செய்ய அனுமதிக்கப்படுவார்கள் என்றும் அறிவித்துள்ளது.

இவ்வாறு, வாழ்க்கைப் போராட்டம் நடத்தியவர்களுக்கு எத்தேசத்திலும் கண்டிராத பழிவாங்கலும் — வாழ்க்கை போராட்டத்தை உடைக்கப் பணிபுரிந்தவர்களுக்கு சலுகைகளும் பரிசுகளும் வழங்கப்படும் காட்சியைப் பார்க்கிறோம்.

## எச்சரிக்கை!

அதனால்தான், பழிவாங்கலை நிறுத்தாவிட்டால், மீண்டும் போராட்டம் வெடிக்கும் என்று, இரயில்வே தொழிலாளர் தலைவர்கள் எச்சரிக்கை விட்டிருக்கிறார்கள்!

இம்மாதம் 18-ம் தேதி கறுப்பு பேட்ஜ் அணிந்து, ஆர்ப்பாட்டங்கள், பொதுக்கூட்டங்கள் நடத்துவது என்றும் தீர்மானித்திருக்கிறார்கள்.

# குமரி மாவட்டத்தில் சோசலிஸ்ட் வாலிபர் சங்க கிளைகள் அமைப்பு

நாகர்கோவில் ஜூன் 15— நாகர்கோவில் பக்கமுள்ள பொட்டல் என்ற இடத்தில் வாலிபர் சங்கத்தின் கிளை அமைக்கப்பட்டது.

கிளையின் தலைவராக தோழர் கே. டி. மணியும் செயலாளராக தோழர் கே. முருகாண்டியும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்டத்தில் மாணவர் சங்க குமரி மாவட்ட உதவி செயலாளர் தோழர் பாலகிருஷ்ணன் கலந்து கொண்டார்.

ராஜாவூர் என்ற இடத்தில் சோசலிஸ்ட் வாலிபர் சங்ககிளை அமைக்கப்பட்டது. கிளையின் தலைவராக தோழர் ஆசைமுத்துவும் செயலாளராக தோழர்வர்க்கீசும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கிளை அமைப்பு கூட்டத்தில் தோழர் ஏ. ஐ. முத்து கலந்துகொண்டார்.

### கண்ணுமாமூடு கிளை

சோசலிஸ்ட் வாலிபர் சங்க கண்ணுமாமூடு கிளை அமைப்புக் கூட்டத்தில் தோழர் பி. சுரேந்திரன் நாயர் தலைவராகவும் தோழர் பி. தங்கப்பன் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்டத்தில் மாவட்ட குழு உறுப்பினர் பி, கோபிதாஸ் கலந்து கொண்டார்.

குழித்துறை கிளை அமைப்புக் கூட்டத்தில், தோழர் டி. ராஜேந்திரன் தலைவராகவும் தோழர் எஸ் கிருஷ்ணமூர்த்தி செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள்.

### கோழிவிளை கிளை

சோசலிஸ்ட் வாலிபர் சங்கத்தின் கோழிவிளை கிளை அமைக்கப்பட்டது. தோழர் பி. குட்டப்பன் தலைவராகவும் தோழர் கே. ரவிந்திரன் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர். கூட்டத்தில் மாவட்ட குழு உறுப்பினர் பி. சுந்தரமும் கலந்து கொண்டார்.

வன்னியூரில் சோசலிஸ்ட் வாலிபர் சங்க கிளை அமைக்கப்பட்டது. தோழர் ஜேம்ஸ் ராஜ் தலைவராகவும் தோழர் வர்க்கீஸ் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

அருமனையிலும் சோசலிஸ்ட் வாலிபர் சங்க கிளை அமைக்கப்பட்டது தோழர் விசுவம்பான் தலைவராகவும் தோழர் அமிர்தசிங் செயலாளராகவும் தேர்ந்தெடுக்கப்பட்டனர் இக்கூட்டத்தில் மாவட்ட குழு உறுப்பினர் தோழர் என். ராமசந்திரன் கலந்து கொண்டார்.

### படந்தாலுமூடு கிளை

சோசலிஸ்ட் வாலிபர் சங்க படந்தாலுமூடு கிளை அமைப்பு கூட்டத்தில் தோழர் கே. நடராஜன் கன்வீனராக தேர்ந்தெடுக்கப்பட்டார்.

காஞ்ஞாம்புரம் கிளை தலைவராக தோழர் என். நடராஜனும் செயலாளராக தோழர் செல்வரேசவும் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். அமைப்பு கூட்டத்தில் மாவட்ட செயலாளர் கே. மாதவன் கலந்து கொண்டார்.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ் மாநிலக்குழு சார்பில் தீக்கதிர் அச்சகத்தில் (6/16 பைபாஸ் ரோடு மதுரை-625018) அச்சிட்டு வெளியிடு [illegible]

காவேரி நீர் பிரச்னை:

# முதல்வர்கள் மாநாடு மீண்டும் கூடும்

திருவனந்தபுரம், ஜூன். 14— காவிரி நீர் பிரச்சனை குறித்து மீண்டும் பேசுவார்த்தை நடத்த கேரளம், தமிழ்நாடு, கர்நாடக முதலமைச்சர்களின் மாநாடு ஜூன் மாத இறுதியில் கூடவிருக்கிறது. இந்த மாநாட்டை, மத்திய பாசன மின்சார அமைச்சர் கே. சி. பந்த் கூட்டியுள்ளார். இந்தத் தகவலை கேரள முதலவர் அச்சுதமேனன் நேற்று திருவனந்தபுரத்தில் நிருபர்களிடம் தெரிவித்தார்.

சிகிச்சை பெறவும் ஓய்வு எடுக்கவும் அச்சுதமேனன் சோவியத் நாடு செல்லுவதால், அவர்சார்பில் அந்த மாநாட்டில் கேரள பொதுப் பணித்துறை அமைச்சர் டி. கே. திவாகரன் கலந்து கொள்வார்.

காவிரி நீர் பற்றிய உண்மை ஆய்வுக்குழு, மத்திய அரசிடம் தாக்கல் செய்துள்ள 2-வது அறிக்கையின் அடிப்படையில்கேரள தமிழ்நாடு, கர்நாடக மந்திரிகளின் அடுத்தசுற்றுப்பேச்சு நடைபெறும்.

# பஞ்சாப் பந்த்

சண்டிகார், ஜூன். 14— ஜனசங்கம், அகாலிதளம் சுதந்திரா, சோசலிஸ்ட் ஆகிய கட்சிகள் சேர்ந்து, ஜூன் 27-ந் தேதி பந்த் நடத்த அறைகூவல் விடுத்துள்ளன.

விலைவாசி உயர்வு, புது வரிகள், ஜீவாதார உரிமைகள் நசுக்கப்படுதல் ஆகியவற்றைக் கண்டித்து இந்த பந்த் நடத்தப்படுகிறது.

# சேஷசாயி.....

(1-ம் பக்க தொடர்ச்சி)

யுடன் கருங்காலிகளை வைத்து போராட்டத்தை உடைக்கும் முயற்சியில ஈடுபட்டுள்ளனர். இம்முயற்சிகளையும்தொழிலாளிகள் வெற்றிகரமாக முறியடித்து வருகிறார்கள்.

இப்போராட்டத்தை வெற்றிகரமாக நடத்தி முடிக்க, தமிழகம் தழுவிய தொழிலாளிகள் இவர்களுக்கு ஆதரவாக திரள வேண்டிய தருணம் வந்துவிட்டது.

ஆகவே, சி ஐ டி யூ வுடன் இணைக்கப்பட்டுள்ள எல்லாத் தொழிற்சங்கங்களும் கீழ்காணும் பணியினை உடனடியாகமேற்கொள்ள வேண்டும்.

1) உடனடியாகத் தலையிட்டு சமரசம் செய்து வைக்கக்கோரி முதலமைச்சருக்கும். தொழிலாளர் நல அமைச்சருக்கும் தந்திகள் அனுப்பவேண்டும்.

2) 19—6—74-ந் தேதி எல்லாத் தொழில் கேந்திரங்களிலும். நகரங்களிலும் ஆர்ப்பாட்டங்களும், கூட்டங்களும் நடத்தி, "சேஷசாயி பேப்பர் மில் தொழிலாளர்கள் போராட்ட ஆதரவு தினம்" அனுஷ்டிக்க வேண்டும்.

3) உடனடியாக 500-க்கும் கீழே அங்கத்தினர்களைக் கொண்ட சங்கங்கள் ரூ.10ம், 500-க்கும், அதற்கு மேலும் அங்கத்தினர்களைக் கொண்டசங்கங்கள் ரூ.15ம்

தோழர் வி ராமசாமி,
செயலாளர்
எஸ்.பி.பி. லேபர் யூனியன்,
காவிரி ஆர்.எஸ்.
ஈரோடு-7

என்ற முகவரிக்கு உதவி நிதியாக அனுப்பவேண்டும்:

மேற்கொண்டு சி. ஐ டி. யூ. மாநில மையம் எடுக்கவிருக்கும் சகலநடவடிக்கைகளையும், மேற்கொள்ள எல்லாத் தொழிற்சங்கங்களும் தயாராக இருக்கவேண்டும்.

# கம்போடிய பொம்மை அரசின் ராஜினமா நாடகம்

நாம் பென், ஜூன் 14 லான்நால் என்பவரின் அதிகாரத்துக்கு உட்பட்ட கம்போடிய அரசு ராஜினமாச் செய்துள்ளது.

கம்போடியாவில் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளுக்கும் ஜப்பான் முதலாளிகளின் ஆதிக்கத்துக்கும் எதிராக நடந்த மாணவர் கிளர்ச்சியால் ஏற்பட்டுள்ள அரசியல் நெருக்கடியைச் சமாளிப்பதற்காகவே இந்த ராஜினமா நாடகம் நடத்தப்பட்டுள்ளது.

லாங் போரெட் என்பவரை பிரதமராகக்கொண்ட சமூக குடியரசு வாதிகளும் குடியரசு வாதிகளும் அடங்கிய கூட்டு அரசாங்கம் தனது ராஜினமாவை, கம்போடிய அதிபர் லான்— நாலிடம் சமர்ப்பித்தது.

ராஜினமாக் கடிதத்தைப் பெற்றுக்கொண்ட லான—லால் மீண்டும் புதிய அரசு ஒன்றை அமைக்குமாறு கேட்டுக்கொண்டாராம். அதன்படி, சமூக குடியரசு வாதிகளும், குடியரசுவாதிகளும் அடங்கிய புதிய அரசே மீண்டும் ஏற்படுத்தப்படும்.

# ஜூன் 18 ல் கண்டன தினம்

மதுரை ஜூன் 14— இரயில்வேத் தொழிலாளர் வேலை நிறுத்தத்தையொட்டி, இரயில்வேத் தொழிலாளர்கள் பழிவாங்கப்படுவதை எதிர்த்து மதுரையில் வருகிற 18ந் தேதி (செவ்வாய்) கண்டன தினம் அனுஷ்டிக்கப்படுகிறது. அன்று ஊர்வலமும்பொதுக் கூட்டமும் நடக்கிறது.

அனைத்துச் சங்கத் தலைவர்களும் கலந்து கொள்ளுகிறார்கள்.

மதுரை டிவிசனில்

# நூற்றுக்கணக்கானோர் வேலை நீக்கம்

மதுரை ஜூன் 14— இரயில்வே தொழிலாளர்கள் தங்களுடைய 6 அம்சக் கோரிக்கைகளை முன் வைத்து இந்தியாவெங்கும் போராடினார்கள். போராட்டத்தில் முனைப்பாக ஈடுபட்டோரையும் தொழிற்சங்க முன்னணி ஊழியர்களையும் மதுரை டிவிசனிலிருந்து வேலை நீக்கம் செய்துள்ளனர்.

இவ்வாறு நிர்வாகத்தால் வேலை நீக்கம் செய்யப்பட்டுள்ளவர்கள் 66 பேர். பழிவாங்கும் நடவடிக்கையாக 12 பேர்களை வேறு இடங்களுக்கு மாற்றியுள்ளது இரயில்வே நிர்வாகம்.

### நூற்றுக்கணக்கான கேசுவல் தொழிலாளர்கள்

மேலும் போராட்டத்தில் கலந்து கொண்டதற்காக ரயில்வே லோகோ ஷெட் கேசுவல் தொழிலாளர்கள் 52 பேர்களுக்குவேலை மறுக்கப்பட்டுள்ளது. இதே போன்று பல்வேறு இடங்களில் ஏராளமான கேசுவல் தொழிலாளர்களுக்கு வேலை மறுக்கப்பட்டுள்ளது.

அலுவலக குமாஸ்தாக்களுக்கும்— போராட்டத்தில் ஈடுபட்ட ரயில்வே தொழிலாளர்களுக்கும் சர்வீஸ் முறிவு செய்யப்பட்டுள்ளது.

இரயில்வே அமைச்சர் அளித்த வாக்குறுதிக்கு மாறாக, இரயில்வேநிர்வாகம செயல்படுகிறது.

இந்த பழிவாங்கும் நடவடிக்கையை எதிர்த்து கிளர்ச்சி துவங்கப்பட்டுள்ளது.

# 5 மாத கால போராட்டம் வென்றது

பம்பாய், ஜூன் 15— பம்பாய் தானா பகுதியிலுள்ள கோதாரி யந்திர பகுதிகள் செய்யும் தொழிற்சாலை தொழிலாளர்கள் சென்ற ஜனவரி 15-ந் தேதியிலிருந்து ரூ. 100 சம்பள உயர்வு கோரி வேலைநிறுத்தம் செய்து வந்தனர்.

நிர்வாகம் 75 ரூபாய் சம்பள உயர்வு அளிப்பதாக ஒப்புக்கொண்டதை தொழிலாளர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை,

5 மாத கால வேலைநிறுத்தத்துக்கு பின்னர் ரூ 90 சம்பள உயர்வளிப்பதாக நிர்வாகம் ஒப்புக் கொண்டது. இதையொட்டி தொழிலாளர்கள் வேலைக்குத் திரும்பினர்.

இதே பகுதியில் பனாமா பிளேடு கம்பெனி தொழிலாளர்கள் நடத்தும் வேலைநிறுத்தம் நீடிக்கிறது